# அசல் க்ளாக்ஸோஸ்-D® ஒன்றே ஒன்றுதான் உண்டு. அதனைத் தயாரிப்போர் க்ளாக்ஸோ.

பச்சை நிறத்தில் அச்சிட்ட
'க்ளாக்ஸோ' பெயருடைய
எடுப்பான இந்த
டிசைன்
இருக்கிறதா
பாருங்கள்.

GLAXOSE-D®
Glucose-D
Glaxo
GL

Ⓡ டிரேடு மார்க்கின் ரிஜிஸ்டர்டு யூஸர்ஸ்

ஒப்பற்ற நம்பிக்கைக்குரிய தயாரிப்பு: க்ளாக்ஸோஸ்-D. வைட்டமின் D³, பாஸ்பரஸ், கேல்ஷியம் யாவும் செறிந்த தூய க்ளூகோஸ் பவுடர் இதில் அடங்கியுள்ளது. உடனடி சக்திக்காகப் பல லட்சம்பேர் அருந்துவது க்ளாக்ஸோஸ்-D— இதனைத் தயாரிப்பவர்கள் க்ளாக்ஸோ—பல விதமான உணவுப் பண்டங்களுக்கும் உயிர்காக்கும் மருந்துகளுக்கும் பெயர் பெற்ற நிறுவனம் அது.

உஷார், மட்டமான போலிகளை உங்கள் நம்பினீரானால், குடும்ப நலனுக்கே பேராபத்தாக முடியும்.

வாங்கும் பேக்கெட் அசல்தானா என்று பார்த்து வாங்குவீர் க்ளாக்ஸோஸ்-D.

**க்ளாக்ஸோஸ்-D®**

dCF/GL/35 K. Tam



# இப்போது!
# வறுத்தெடுக்கும் கோடை நாட்களில் குளுமையாகப் புதுமலர்ச்சியுடன் விளங்குங்கள்

மற்றொரு மின்வெட்டு! இக் கோடை மிகவும் கடுமையாகவும், வெப்பமாகவும், இருக்கப்போகிறது. ஆனால் கவலைவேண்டாம்: அப்போது குளுமையாகப் புது மலர்ச்சியுடன் விளங்கிட இதோ ஒரு புதிய வழி. நீங்கள் குளித்தவுடன் உடம்பு முழுவதும் ஜான்ஸன்ஸ் மென்தொலேட்டெட் பவுடரைத் தூவிக்கொள்ளுங்கள். ஜான்ஸன்ஸ் மென்தொலேட்டெட் பவுடரில் மட்டுமே அடங்கியுள்ள **மென்தால்** உங்களுக்குக் குளுமையும் புதுமலர்ச்சியும் அளித்து, கோடையில் உராசுவதால் ஏற்படும் புண்ணிலிருந்தும், வேர்க்குருவிலிருந்தும் உங்கள் சருமத்திற்கு சுகமளிக்கிறது.

கோடைகால நாட்களைக் குளுமையுடன் கழியுங்கள். ஜான்ஸன்ஸ் மென்தொலேட்டெட் பவுடர் உபயோகியுங்கள்.




OBM 4320

# ஜான்ஸன்ஸ்*
# மென்தோலேட்டெட் பவுடர்

75 கோடையில் மென்தால்-குளுமை தரும் ஒரே பவுடர்.



Johnson & Johnson*

# சிறு துளி பெரு வெள்ளம்

## தமிழ்நாடு மாநில கூட்டுறவு வங்கியில் முதலீடு செய்யுங்கள்




டெபாஸிட்டுகளுக்கு எங்கள் வட்டி விகிதங்கள் :

1. *சீசன்* டெபாஸிட்டுகள் - ரூ 1000/-மும் அதற்கு மேலும் — வருடத்திற்கு
   15 நாட்கள் முதல் 45 நாட்கள் வரை — 3.25%
   46 நாட்கள் முதல் 90 நாட்கள் வரை — 3.75%
2. தவணை டெபாஸிட்டுகள் - ரூ 100/-ம் அதற்கு மேலும்

| காலம் | வருடத்திற்கு |
|---|---|
| 91 நாட்களிலிருந்து 6 மாதங்களுக்கு குறைவாக | 5.75% |
| 6 மாதங்களிலிருந்து 9 மாதங்களுக்கு குறைவாக | 6.25% |
| 9 மாதங்களிலிருந்து 1 வருடத்திற்கு குறைவாக | 7.25% |
| 1 வருடமும் அதற்கு மேலும் ஆனால் 3 வருடங்களுக்கு குறைவாக | 8.25% |
| 3 வருடங்களும் அதற்கு மேலும் ஆனால் 5 வருடங்கள் வரை | 9.25% |
| 5 வருடங்களுக்கு மேல் | 10.25% |

3. சேவிங்ஸ் கணக்கு — 5.75%
4. நடப்பு (current) கணக்கு — வட்டி கிடையாது



## தமிழ்நாடு மாநில கூட்டுறவு வங்கி லிமிடெட்,

379, நேதாஜி சுபாஷ்சந்திர போஸ் ரோடு, சென்னை-600 001
தந்தி : 'URBANK' போன் : 20367 (3 லைன்கள்)
டெலக்ஸ் :MS 7225

கிளைகள் : அண்ணா நகர், அண்ணா சாலை (காமதேனு), அண்ணா சாலை (அண்ணா சிலை), அசோக் நகர், பெஸண்ட் நகர், எழும்பூர், காந்தி நகர், கிரீன்வேஸ் ரோடு, ஜவஹர் நகர், கெல்லீஸ், தங்கசாலை, மைலாப்பூர், மைலாப்பூர் குளம், நுங்கம்பாக்கம், புரசைவாக்கம், ராயப்பேட்டை, ராஜா அண்ணாமலைபுரம், சாந்தோம், சாஸ்திரி நகர், ஷெனாய் நகர், தியாகராய நகர் & திருவல்லிக்கேணி

TNSCB : 122/75

# கல்கி

ராக்ஷஸ ஆனி 8
ஜூன் 22, 1975






## ராஜு-ரோஸி















கல்கி காரியாலயத்தின் அக்கௌன்டெண்ட் ஸ்ரீ பி. ராமகிருஷ்ணன் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி R. சங்கரன் B.Sc.க்கும், சென்னை ஸ்ரீ கணபதி அய்யர் அவர்கள் குமாரத்தி சௌபாக்கியவதி **வனஜாவுக்கும்** திருமணம் சென்னையில் சிறப்பாக நடைபெற்றது.

கல்கி அதிபர் ஸ்ரீ டி. சதாசிவம் அவர்களும் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களும் வருகை தந்து மணமக்களை ஆசீர்வதித்தனர்.



நாகபூண்டி ஸ்ரீ குமாரஸ்வாமி அய்யர் அவர்கள் புதல்வரும், சென்னை, பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்டின் விளம்பர அதிகாரியுமான சிரஞ்சீவி **கே. பாலசுப்ரமணியம்** அவர்களுக்கும், ஸ்ரீ டி. பி. அருணாசல அய்யர் அவர்கள் புதல்வி சௌபாக்கியவதி **தனலட்சுமிக்கும்** சமீபத்தில் பெங்களூரில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்

# For the first time in the world

# A fairness cream that works without bleaching

Never before in the world has there been a product that has been able to effect fairness without bleaching. Till now, trying to make the skin fairer has always been a chancy business. Using a bleach to lighten the skin is known to be harmful, particularly if used frequently, owing to its harsh characteristics.

**Fair & Lovely is a scientific breakthrough that works two ways**

1. **It has a vitamin that works from the inside**




The vitamin enters the skin as you apply the cream. You can feel it working as you smooth it in . . . gently reversing the spreading of skin-darkening. With regular application through a period of six weeks you will notice the difference. And so will others.

2. **It has sun screen agents to protect from outside**

Fair & Lovely protects the skin by filtering out those sun rays that cause skin darkening.

**Fair & Lovely a fairness cream . . . and more**

Use it as a vanishing cream under make-up, at least once a day, twice for best results. Regular use of Fair & Lovely will ensure that you keep your complexion as fair as you want it to be.

**Fair & Lovely – the gentle way to a fairer skin**

# இந்திரா அவர்களே, இறங்குங்கள்!

கல்கி

மலர் 34

இதழ் 47



'இந்திரா காந்தி அவர்களே, பிரதமர் நாற்காலியை விட்டுக் கீழே இறங்குங்கள்!' என்று சொல்கிறோம். 'பிரதமர் காரியாலயத்தை விட்டு வெளியேறுங்கள்!' என்று கூறுகிறோம். ஜோசியர்கள் பேச்சைக் கேட்டுப் பதவியைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டிருக்க வேண்டாம்!

நம்மை விட்டால் பிரதமராக வர வேறு யார் இருக்கிறார்கள் என்று மயங்கத் தேவையில்லை. உங்களை விடப் பழுத்த அனுபவம் உள்ளவர்கள் மந்திரி சபையிலேயே இருக்கிறார்கள். அப்படி அவர்களிடம் நம்பிக்கை இல்லையென்றால் ராஷ்டிரபதி ஆட்சிக்கு வழி வகுத்துவிட்டுப் போங்கள்.

இதோ, தேர்தல் இன்னும் ஒருசில மாதங்களில் வந்துகொண்டிருக்கிறது. அதுவரை ராஷ்டிரபதி ஆட்சி நடப்பதால் ஒன்றும் குடிமுழுகிப் போய்விடாது. அரசாங்க அலுவல்கள் ஸ்தம்பித்துப் போய்விடாமல் அதிகாரிகள் கவனித்துக்கொள்வார்கள்.

பார்க்கப் போனால் தேர்தலுக்கு ஆறு மாதங்கள் முன்னால் மந்திரி சபை ராஜிநாமாச் செய்து ராஷ்டிரபதி ஆட்சி நடக்க வேண்டும்; அப்போதுதான் தேர்தலில் தில்லுமுல்லுகள் இராது என்று அறிஞர்கள் பலர் நீண்ட நாட்களாகவே கூறி வந்திருக்கிறார்கள்.

ஜனநாயக ரீதியான இந்த வழிமுறைகளைக் கையாளாமல் பதவியைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டே சுப்ரீம் கோர்ட்டுக்குப் போயிருக்கிறீர்கள். அங்கே உங்களுக்குச் சாதகமான தீர்ப்பு வழங்கப்படலாம். அந்தத் தீர்ப்பு வழங்கப்படு முன்னர் அடுத்த தேர்தலே கூட வந்துவிடலாம். ஆனால் அவையெல்லாம் நீங்கள் ராஜிநாமா செய்யாதிருப்பதற்குத் தகுந்த காரணங்கள் ஆகமாட்டா. ராஜிநாமாவைச் சமர்ப்பித்துவிட்டுப் பிறகு உங்கள் நற்பெயரைக் காத்துக்கொள்ள முயலுங்கள்.

நீங்கள் தேர்தலின்போது நியாயமற்ற முறைகளைக் கையாண்டீர்கள்; தேர்தல் விதிமுறைகளையும் சட்டங்களையும் மீறினீர்கள் என்று நிரூபணமாகியுள்ளது. இந்த ஜனநாயகத்தின் மிகச் சக்தி வாய்ந்த பதவியில் உள்ள தங்களைப் பற்றி இவ்வாறு ஒரு தீர்ப்பு வெளியான பிறகும் நீங்கள் தொடர்ந்து பதவியில் இருப்பது உங்களுக்கு அவமானமாகத் தோன்றாமல் இருக்கலாம். ஆனால் அது இந்தத் தேசத்துக்கே அவமானம்; இந்த நாட்டு மக்களுக்கு இழுக்கு. ஜனநாயக உணர்வு நன்கு வளர்ந்துள்ள பிற தேச மக்களும் தலைவர்களும் இந்நாட்டைப் பற்றியும் மக்களைப் பற்றியும் என்ன நினைப்பார்கள்? சிறிது யோசியுங்கள்.

'அலகாபாத் ஹைகோர்ட் பெரிய குற்றம் எதையும் பிரதமர் இழைத்துவிட்டதாகக் கூறவில்லை; சில 'டெக்னிகல்' தவறுகளையே சுட்டிக் காட்டியிருக்கிறது' என்று உங்கள் சார்பில் சில சக்திவாய்ந்த பத்திரிகைகள்கூட வாதாடுகின்றன.

ஒரு நீதிபதி எந்தக் குற்றச்சாட்டு சந்தேகத்துக்கு இடமின்றி நிரூபிக்கப்படுகிறதோ அந்தக் குற்றச்சாட்டு மீதுதான் தீர்ப்பு வழங்க முடியும். மற்றவற்றை அவர் தள்ளிவிட வேண்டியதுதான். நீங்கள் செய்த சாமானியத் தவறுகள் நிரூபிக்கப்பட்டிருப்பதால் பெரிய குற்றங்களையும் நீங்கள் செய்திருக்கலாம், செய்யக் கூடும் என்ற சந்தேகங்கள் வலுவடைகின்றன. இவற்றை, 'சாட்சியம் வைத்துக் கொண்டோ அகப்பட்டுக்கொள்கிற மாதிரியோ செய்வாரா என்ன?' என்று மக்கள் கேட்பதில் அர்த்தம் இருக்கிறது.

எந்த விதமாகப் பார்த்தாலும் நீங்கள் உடனே பதவி துறப்பதுதான் உங்களுக்கும், நாட்டுக்கும், இந்த ஜனநாயகத்துக்கும் நல்லது. அன்றி பதவியிலிருந்து வந்தால்தானே அடுத்த தேர்தலுக்கு வசதி என்று கணக்குப் போட்டீர்களானால் இந்த நாட்டின்

தமிழ்த்திரு நாட்டினைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்


பட்ட
காலிலே......


குஜராத்


அலகாபாத்


நான்
உன்னைக்
கைவிட மாட்டேன்
நீதி மன்றம்
ஜனநாயகம்

மக்களிடையே ஜனநாயக, அரசியல் விழிப்புணர்ச்சி படிப்படியாக ஏற்பட்டு வருவதை நீங்கள் உணரவில்லை என்பது தான் பொருள்.

குஜராத்தில் உங்கள் பண பலத்துக்கும் அதிகார துஷ்பிரயோகத்துக்கும் கிடைத்த பேரிடி இனியும் தொடரும்.

# என்ன சேதி?

## போதனா மொழி

உலகின் வேறு பல நாடுகளுடன் போட்டி போட்டுக் கொண்டு இங்கு துரிதமான விஞ்ஞான முன்னேற்றம் ஏற்பட வேண்டுமானால் விஞ்ஞானப் பாடங்களைப் போதிக்கும்போது சர்வதேசங்களிலும் பொதுவாகப் புழங்கும் சூத்திரங்கள், சங்கேதங்களையே இங்கும் நாம் பயன் படுத்தி வர வேண்டும்; அவற்றைத் தமிழ்ப்படுத்திக் கொண்டு அவஸ்தைப்படக் கூடாது என்று கல்வி அமைச்சர் திரு நெடுஞ்செழியன் பேசியிருக்கிறார். விஞ்ஞான போதனையைத் தமிழிலேயே நடத்தலாம் என்றும் தாய் மொழியில் சொல்லித் தந்தால் சீக்கிரம் கிரகித்துக் கொள்ள முடியும், சிந்தனா சக்தி கிரியா சக்தி ஆகியவை நன்கு செயல்படும் என்றும் கூறியுள்ளார். இவை யெல்லாம் யதார்த்த நோக்கில் பேசப்பட்ட மிக செம்மையான கருத்துக்கள்.

இப்படிக் கூறிய நெடுஞ்செழியன் தொடர்ந்து, 'ஐயோ ! தமிழாக்கம் செய்யப் பட்ட விஞ்ஞானப் பாட நூல்கள் விற்பனையாகவில்லையே, தேங்கிக் கிடக்கின்றனவே' என்று புலம்புவதை நம்மால் புரிந்து கொள்ள முடியவில்லை. அவை விற்பனையாகாமல் தேங்குவதில் அதிசயமும் இல்லை. ஏனெனில், இந்நூல்களைப் படிக்கையில் இயல்பாய் இராமல் செயற்கையான இனிப்பாகத்தான் தோன்றும்.

தமிழில் விஞ்ஞானம் போதிப்பதற்குத் தமிழ்ப் பாட நூல்கள் அவசியமில்லை. எப்படி சர்வதேசத்துக்கும் பொதுவான சங்கேதங்களையும் சூத்திரங்களையும் பயன் படுத்தலாம் என்கிறாரோ அப்படியே விஞ்ஞானச் சொற்களும் ஆங்கிலத்தில் இருக்கலாம்; பாடப் புத்தகங்களும் அந்தச் சர்வதேச மொழியிலேயே இருந்துவிட்டுப் போகலாம்.

வகுப்பில் பேராசிரியர்கள் விஞ்ஞானத் தத்துவங்களை விளக்கும் போது தமிழில் அவ்வப்போது பேசித் தெளிவுபடுத்தலாம். மாணவர்களுடன் தமிழில் உரையாடலாம். சந்தேக விளக்கம் செய்யலாம். பரீட்சை எழுதும் போதும் மாணவர்கள் தாய் மொழியிலோ அல்லது ஆங்கிலத்திலோ அவர்கள் வசதி போல் எழுத அனுமதிக்கலாம். ராஜாஜி கூறி வந்த சீரிய யோசனை இது.

விஞ்ஞானத்தில் விஷயம்தான் முக்கியமே யன்றி பாஷை அல்ல. ஆனால் இங்கே தயாராகும் விஞ்ஞானி சர்வதேசத் தொடர்பு கொள்ள யத்தனிக்கும்போதும் புதிய புதிய முன்னேற்றங்களை அறிய விழையும்போதும் ஆங்கிலம் அவசியமாகிறது. எனவே ஆங்கிலத்தைச் சரளமாகப் பேசவும் படிக்கவும் நமது மாணவர்கள் கற்பது இன்றியமையாதது. பிரிட்டனில் இந்திய டாக்டர்கள் 'மவுசு' இழந்து போனதற்குக் காரணம், புதிதாகச் செல்லும் டாக்டர்களுக்கு இங்கிலீஷ் பேச வரவில்லை என்பதொன்றாகும். அதை அலட்சியம் செய்யும் தமிழகம் துரித முன்னேற்றம் அடைவது சாத்தியமே அல்ல.

## உளறல் கோப்பை!

உலகக் கோப்பையைப் பெறுகிறார்களோ இல்லையோ உளறலுக்கு ஒரு கோப்பையைப் பெறாமல் இந்தியா திரும்பமாட்டார்கள் போலிருக்கிறது நமது இந்திய கிரிக்கெட் கோஷ்டியினர்.

ஆட்டத்தில் வெற்றி தோல்விகளைவிட நற்பண்புகளைக் காத்து நட்புறவை வளர்ப்பது தான் முக்கியம். கவாஸ்கர் ரன் குவிக்க முற்படாமல் குழி பறித்துக் கொண்டிருந்தது வெட்கக்கேடு என்றால் அதன் பிறகு அவர் 'நான் பாட்டிங் பிராக்டிஸ் செய்துகொண்டிருந்தேன்' என்று கூறியது மானக் கேடு. நமது காப்டன் வெங்கட் கவாஸ்கரைச் சாடி நிருபர்களிடம் அறிக்கைவிட்டது அதைவிட அசம்பாவிதமான காரியம். டீம்

ராஜாஜி சிந்தனை

### வெறும் கனவு

விலைவாசி உயர்வை எப்படியோ தடுத்து நிறுத்திவிடலாம் என்பதாக மத்தியிலும் சரி மாநிலங்களிலும் சரி அரசாங்கங்கள் நினைக்கின்றன. இதைச் செய்ய வேண்டும் என்று மாறி மாறி அறிக்கைகள் விடுகின்றன. சட்டம் மூலம் விலைவாசி உயர்வைப் பலவந்தமாகத் தடுத்துவிடலாம் என்று எண்ணுவது வெறும் கனவு. விழிப்புணர்ச்சி ஏற்படாது போனால், கனவைத் தொடர அனுமதித்தால், விலைவாசிகள் மேலும் உயரும், அதோடு கறுப்புச் சந்தையும் அதிகரிக்கும். விலைவாசி உயர்வைத் தடுத்து நிறுத்துவது என்பது சர்க்கஸ் வித்தையல்ல. அதற்குப் பொருளாதாரக் கொள்கைகளில் மாற்றங்கள் தேவை. இன்றுள்ள கொள்கைகளுக்கு நேர் விரோதமான சுதந்திரக் கோட்பாடுகளைப் பின்பற்ற வேண்டும்.

—சுயராஜ்யா, செப்டம்பர் 2, 1961

ஸ்பிரிட் என்பது கிரிக்கெட்டில் ஆரம்பப் பாடம் அல்லவா?

இங்கிலாந்துக்கு எதிரான மாட்சில் ஸ்பின் பௌலர்களை அலட்சியம் செய்தது பிசகு என உணர்ந்து கிழக்கு ஆப்பிரிக்காவுக்கு எதிரான மாட்சில் அதை நிறைவு செய்தது நற்பலனை அளித்திருக்கிறது.

நிதான சிந்தனையுடனும் ஒற்றுமையுடனும் செயலாற்றி நமது கிரிக்கெட் வீரர்கள் பாரதத்துக்குப் பெருமை தேடித் தரட்டும்.

## சுப சூசகம்

படித்த இளைஞர்கள் உத்தியோக வேட்டையாட வேண்டாம்; அரசாங்க உதவியையும் பாங்குகளின் உதவியையும் பெற்றுப் புதிய தொழிலகங்களை ஆரம்பியுங்கள் என்று கேட்டுக் கொண்டிருக்கிறார் முதல்வர். அவ்வாறே தஞ்சை மிராசுதாரர்களைப் பார்த்து 'வருடத்தில் ஆறு மாதம்தானே விவசாயம். பாக்கி ஆறு மாதம் இருக்கிறதே, புதிய தொழில்களைத் தொடங்குவதில் உற்சாகம் காட்டலாமே' என்று பேசியிருக்கிறார்.

தொழில் மின்சார மந்திரி சாதிக்பாட்சா 'சென்னை போன்ற பெரிய நகரங்களைச் சுற்றியே தொழில்கள் வளர்வது நல்லதல்ல. அதனால் பல பிரச்னைகள் ஏற்படுகின்றன. சிறிய நகரங்களைச் சுற்றிப் பல தொழில்கள் ஏற்பட வேண்டும்' என்று கோரியுள்ளார்.

கொள்கை அளவில் இவை யெல்லாம் வரவேற்பதற்குரிய மிகச் சீரிய கருத்துக்களே. ராஜாஜி நீண்ட காலமாகக் கூறி வந்துள்ளதும் இதுவே. ஆனால் நடைமுறையில் கடன் வழங்குதல், லைசென்ஸ் வழங்குதல் முதலியவற்றில் சிவப்பு நாடா சிக்கல்கள் இல்லாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

நமது கல்வி முறையும் மாணவர்களின் மனோபாவம் மாறுகிற விதமாக அமைய வேண்டும்.

அன்றைய தினம் யூனியன் பாங்கும் இளம் தொழிலதிபர்களின் தேசிய மன்றமும் இணைந்து செயல்பட்டு, பத்து லட்சம் ரூபாயைப் பல இளம் தொழிலதிபர்களுக்குக் கடனாகப் புதிய தொழிலகங்கள் தொடங்க வழங்கியிருக்கின்றன.

மின் உற்பத்தியிலும் தீவிரம் காட்டுவோம்; தட்டுப்பாடு இராது என இதே கூட்டத்தில் உறுதி அளித்திருக்கிறார் முதல்வர்.

தமிழகத்தின் வளமான எதிர்காலத்துக்கு இதனைச் சுப சூசகமாகக் கொள்வோம்.

## பிரிட்டிஷ் மக்கள் தீர்ப்பு

ஜனநாயகம் என்றால் இதுவன்றோ ஜனநாயகம் என்று விம்மிதமடையும் வகையில் பிரிட்டனில் அண்மையில் ஒரு பிரச்னைமீதான வாக்கெடுப்பு நடந்தது.

பிரிட்டிஷ் மக்கள் ஒரு மனதாக, பெருவாரியான வாக்குகள் மூலம், ஐரோப்பிய பொது மார்க்கெட்டில் உறுப்பினராக இருப்பதற்குப் பேராதரவு அளித்துவிட்டனர்.

பிரிட்டிஷ் பிரதமர் வில்ஸன் ஐரோப்பிய பொது மார்க்கெட்டில் பிரிட்டன் தொடர்ந்திருக்க வேண்டும் என்ற கொள்கை கொண்டவர். ஆனால் அவர் மந்திரி சபையிலேயே தொழில் துறை மந்திரியான ஆந்தோனி வெட்ஜ்வுட் பென் என்பவர் பிரிட்டன் ஐரோப்பிய பொது மார்க்கெட் குழுவிலிருந்து வெளியேற வேண்டும் என்பதில் தீவிரம் காட்டினார். அவரது ஆதரவாளர்களும் கட்சியில் பலர் இருந்தனர்.

பிரிட்டன் ஐரோப்பிய பொது மார்க்கெட்டில் சேர்ந்ததால், பிரிட்டிஷ் ஏற்றுமதி வர்த்தகத்தைவிட இறக்குமதி வர்த்தகம் அதிகமாக இருக்கிறது. பிரிட்டிஷ் தொழில்கள் சீர்கேடு அடைகின்றன என்பது இவர் வாதம்.

ஐரோப்பா முழுவதும் ஒரே மாதிரியான நாகரிகமும் வாழ்க்கை முறையும் கொண்ட நாடுகள் உள்ளன. அவற்றுடன் சேர்ந்திருப்பதில் நமக்குப் பெருமை, நமது வாழ்க்கைத் தரமும் உயரும் என்பது பிரதமர் வில்ஸன், அவரது ஆதரவாளர்களின் வாதம்.

இப்படிப் பலவிதமான வாதப் பிரதிவாதங்களைக் கேட்டுக் கொண்டு பிரிட்டிஷ் பொது மக்கள், இப்பிரச்னை மீதான வாக்கெடுப்பில் தங்கள் தீர்ப்பை வழங்கினார்கள். உடனடியாகப் பொருளாதார ரீதியில் நஷ்டம் இருந்தாலும் நிரந்தரமான கௌரவம், எதிர்கால லாபம், செல்வாக்கு ஆகியவற்றைக் கருதிப் பொதுச் சந்தையில் உறுப்பினராகத் தொடர்ந்து இருப்பதற்குப் பிரிட்டிஷ் மக்கள் பேராதரவு அளித்துவிட்டார்கள்.

உலகெங்கும் நாகரிக முன்னேற்றம் அடைந்த மக்களின் மனம், விசாலப்பட்டு வருவதையும் 'ஒரே உலகம்' என்ற லட்சியம் நோக்கி அவர்கள் படிப் படியாக முன்னேறி வருவதையும் இங்கேயுள்ள மாநில சுயாட்சிக் கோரிக்கையாளர்கள் கவனிக்க வேண்டும்.

## மறக்க முடியாத மனிதர்

பேராசிரியர் ஏ. ராமய்யரின் மறைவு ஈடு செய்ய முடியாத நஷ்டமாகும். திருச்சி நாஷனல் காலேஜ் என்று வழங்கும் தேசியக் கல்லூரியில் ஆங்கிலப் பேராசிரியராகச் சேர்ந்து ஆங்கிலப் பாடத்துடன் மாணவர்களுக்குத் தேசபக்தியும், சமூக சேவையும் ஊட்டிய அரிய ஆசிரியர் ராமய்யர். அவர் ஆங்கில பாடம் போதிக்காத மற்ற நேரங்களில் தமிழக மக்களுக்கு ஓரளவாகிலும் ஹிந்தி தெரிந்திருக்க வேண்டும் என்று ஹிந்திப் பிரசாரம் செய்து வந்தார். அதற்காகத் தாமே ஒரு ஹிந்தி — தமிழ்ப் பத்திரிகை நடத்தி வந்தார். திருச்சி கல்லூரியிலிருந்து ஓய்வு பெற்ற பின் சிறிது காலம் கொல்லம் கல்லூரியிலும் பணியாற்றினார். காந்தி மகான் கடிதத் தொகுப்புக்களைப்பற்றிச் சீரிய விமரிசனக் கட்டுரைகளை நமது சகோதரப் பத்திரிகையான 'சுயராஜ்யா'வில் எழுதி வந்தார். அவர் மறைவால் வருந்தும் குடும்பத்தினருக்கும் ஏராளமான மாணவர்களுக்கும் நண்பர்களுக்கும் நமது ஆழ்ந்த அனுதாபங்கள்.



குருத் துரோகத்துக்குத் தண்டனையாக (நிஜமான குரு கூட இல்லை; போலி குருத் துரோகத்துக்காக) உமிக்காந்தல் அக்னியில் வெந்து கொண்டிருந்த குமாரில பட்டருக்கு முன் நம் ஆசார்யாள் வந்து நின்றார்.

ஆசாரிய தரிசனத்தால் குமாரில பட்டருக்குத் துஷாக்னியின் தகிப்பு தெரியவே இல்லை.

தரிசன அமிருதத்தோடு ஆசார்யாள் அவருக்குத் தத்வ உபதேச அமிருதத்தையும் கொடுத்தார்.

இதுவரை கதை சொன்னேன். இப்போது கொஞ்சம் கொஞ்சம் தத்வம் சொல்கிறேன். எல்லாக் கதையும் ஏற்பட்டது தத்வத்தில் நிறைந்து போவதற்குத்தான்.

'வேதம் விதித்துள்ள கர்மாக்களை நாம் செய்தால் அதுவே நிறைவு; ஸ்வாமி பக்தி வேண்டாம்; அவரோடு ஒன்றாகப் போய் விடுகிற ஞானம் வேண்டாம்' என்பது கர்ம மீமாம்சை. இவர்கள் ஒப்புக் கொண்ட அதே வேதங்களில் உள்ள உபநிஷத்தில்தானே கர்மம் எல்லாம் நின்று போன ஜீவபிரம்ம அபேத ஞானத்தைச் சொல்லியிருக்கிறது என்றால்; இவர்கள் வேதத்தை 'விதி' என்றும் 'அர்த்த வாதம்' என்றும் இரண்டாகப் பிரித்தார்கள். விதி என்பது 'நீ இன்னின்ன கர்மாக்களை இப்படி யிப்படிச் செய்' என்று சொல்லி அந்தக் கர்மாக்களில் பிரயோகமாகிற மந்திரங்களைத் தரும் பகுதி. அதாவது காரியத்தைச் சொல்கிற பாகம். ஜீவப் பிரம்ம அபேத வாசகங்களில் காரியம் இல்லை, வெறுமே இருந்து கொண்டிருக்கிற நிலையை அது சொல்கிறது. 'இருப்பது எப்படியோ இருந்து விட்டுப் போகட்டும். நமக்கு, லோகத்துக்குப் பிரயோஜனம் தருவது கர்மம்தான். இந்த விதிகளைக் கொண்ட வேத பாகம்தான் நமக்குப் பிரமாணம்' என்று மீமாம்ஸகர்கள் சொன்னார்கள். விதியாக இல்லாத உபநிஷத்தை 'அர்த்தவாதம்' என்பார்கள். ஒரு விதியை அநுஷ்டிப்பதால் உண்டாகும் பலனை உயர்த்திச் சொல்லி, அதனால் விதிகளில் ஜனங்களை ஊக்குவதற்காகக் 'கதைப் பது'தான் அர்த்தவாதம். பேப்பரில் தாது புஷ்டி லேகிய விளம்பரம் ஒன்றுகண்ணில் பட்டது. அதிலே சிங்கத்தோடு ஒரு ஸாண்டோ (பயில்வான்) குஸ்தி செய்கிற மாதிரிப் படம் போட்டிருந்தது. அந்தப் படம், அதைப் பார்த்து நாம் ரஸிப்பதற்காகவா போட்டிருக்கிறது? இல்லை. 'இந்த லேகியத்தைச் சாப்பிட்டால் நீங்களும் அப்படிப் பலசாலியாக ஆவீர்கள்' என்று நமக்கு ஆசைகாட்டுவதற்கு 'அர்த்தவாதமாக'வே போட்டிருக்கிறது. இப்படியேதான், ''சகல கர்மங்களையும் அநுஷ்டிக்கிறவன் ரொம்பவும் உயர்ந்து விடுவான் என்று ஜீவனை ஸ்தோத்திரம் பண்ணுவதற்காகவே உபநிஷத்துக்களில், 'சகலமாகவும் ஆன பிரம்மம் ஒன்று இருக்கிறது; இந்த ஜீவன்சுத்தப் பிரம்மமே ஆகி விடுவான்; அப்போது இவனுக்குக் கர்மாவே நின்று போய் ஞான மயமாகிறான்' என்றெல்லாம் சொல்லியிருக்கிறது. இந்தக் 'கதை' எல்லாம் ஜீவனை நிறையக் கர்மா பண்ண வைக்கிற உத்தேசத்தில் ஏற்பட்டவை தான்'' என்று கர்ம மீமாம்சகர்கள் சொல்வார்கள். லேகியம் சாப்பிட்டு ஒருநாளும் சிங்கத்தோடு சண்டைக்குப் போக முடியாது என்பது போல, அந்தப் பிரம்ம நிலையும் ஏதோ அசாத்தியத்தைச் சொல்லும் கதை என்று கருதினார்கள்.

இவர்களுக்கு ஆசார்யாள் என்ன எதிர் வாதம் செய்து உபதேசித்தார்? ''வேதத்தில் காரியத்தைச் சொல்கிற 'விதி'களைப் போலவே, இன்னின்ன காரியம் செய்யக் கூடாது என்று சொல்லும் 'நிஷேதங்'களையும் நீங்கள் அர்த்தவாதம் என்று தள்ளிவிடாமல் ஒப்புக் கொள்கிறீர்கள். வேதம் 'கள் குடிக்காதே' என்கிறது. இங்கே செய்ய வேண்டிய காரியம் எதுவும் இல்லை. ஆனாலும் ஒன்றைச் செய்யாததாலேயே பிரயோஜனம் இருக்கிறது — கள் குடிக்காததால் புத்தி கலங்காமல் இருக்கிறது — என்பதால் இதை நீங்களும் ஏற்கிறீர்கள். சில காரியங்களைச் செய்யாததிலேயே பிரயோஜனம் இருக்கிறது என்று காரியத்துக்காக (வேத) சப்தப் பிரமாணத்தை நீங்கள் ஒப்புக் கொள்கிறீர்கள். ஆக, நீங்கள் ஒப்புக் கொள்ளவில்லை, பிரயோஜனத்துக்காகவே ஒப்புக் கொள்கிறீர்கள். சிலவற்றைச் செய்யாமலிருப்பதே பிரயோஜனம் என்று நீங்கள் சொன்னால் நானும் உபநிஷத்தில் சொன்னபடி ஒன்றையுமே — செய்யாததுதான் பரமப் பிரயோஜனம், அது வெறும் அர்த்தவாதம் அல்ல என்கிறேன். ஒரு நிலை வரைக்கும் வேத விதிப்படி லோக க்ஷேமார்த்தமாக கர்மா செய்து செய்துதான் மனசைக் கண்டபடி திரியாமல் தர்மத்தில் கட்ட முடியும். ஆனால் கர்மாவே முடிந்த முடிவு, நிறைந்த நிறைவு என்பது வாஸ்தவமில்லை. கர்மா உள்ளவரை அதன் பலனை அநுபவிக்க ஜன்மா எடுத்துக் கொண்டே தான் இருக்க வேண்டும். ஜன்ம முழுக்கத் துவக்கமே இல்லாமல் நிறைந்திருக்க எவராலாவது முடியுமா? கர்மா தரும் நிறைவும் ஆனந்தமும் தாற்காலிகம்தான். நிறைந்த நிறைவு, நித்யானந்தம் எப்போது ஏற்படுகிறது? கர்மாநுஷ்டானத்தால் சித்த சுத்தி உண்டான பின், கர்மாவை விட்டுத் தியான யோகத்தில் இறங்கி, அதன் முடிவில், தான் எங்குமாக நிறைந்து, ஆனந்த ஸ்வரூபமாக இருக்கிற ஆத்மாவே என்று அநுபவிக்கிற போதுதான் நிறைந்த நிறைவு, பூரணத்துவம், சாசுவத சௌக்கியம் உண்டாகும். இத்தனை கர்மாவும் அந்தக் காரியமற்ற நிலைக்குக் கொண்டு விடவே ஏற்பட்டவை'' என்று உபதேசித்தார்.

(தொடரும்)

1932-ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள் கட்டுரைகளிலிருந்து தொகுத்தது.

"என்ன 'ரிஸல்ட்' வந்தாயிற்று? சென்ட்டமா, குண்ட்டமா?'' உள்ளே நுழையும் போதே கேட்டேன்.

''ஏன் அப்படிக் கேட்கிறீர்கள்? எல்லாம் 'ஸ்வீட்'டுக்குத்தான் செலவு. இதோ டிபனைப் பாருங்கள். போண்டா, ஹல்வா'' என்று ராஜி முகம் மலர நின்றாள்.

''ஆமாம், ஸ்வீட் காரம் கொண்டாட்டம் ஒரு குறைச்சல். இந்தப் பெரிய பி. ஏ. பரீட்சைக்கு! ஏதாவது முதல் பரிசு உண்டா? இந்த விசித்திரமான ஆந்திரா கல்வித் திட்டம் தான் தெரியுமே! முப்பதோடு முப்பத்தி ஒன்றாகத் தூக்கிப் போட்டிருப்பார்கள்.'' ரிபோர்ட்டைப் புரட்டினேன். ''ம்...ஷீலா உனக்கு ஏன் சோஷல் ஸ்டடீஸில் ஐம்பது மார்க்குத்தான் வந்தது?'' இப்படித் தான் அப்பாவாகப்பட்டவன் கேட்க வேண்டும்!

''அதுவா அப்பா? அந்த சோஷல் ஸ்டடீஸ் டீச்சர் சொல்லித் தந்த லட்சணத்திற்கு அவனைத் தவிர வேறு யார் திருத்தினாலும், எங்களுக்கு ஐம்பது கிடைத்ததே அதிசயம் என்பார்கள்.''

''சீ கழுதைகளே! என்ன குருபக்தி! இந்த வாய்தான் இருக்கிறது. மற்ற பெண்களெல்லாம் படிக்க வில்லையாக்கும். நல்ல வேளை ஏதோ பாஸ் என்று வந்தீர்களே. க்ஷேமம்!'' நான் டிபனில் ஈடுபட்டேன்.

''ஆமாம், உங்களுக்கு எப்போதும் நாங்கள் தான் மட்டம். நாங்கள் ஏன் பெயிலாவோமாம் ...க்கும்!'' ஷீலா நொடித்தாள்.

''சரி. பாஸான குழந்தைகளுக்கு என்ன தருகிறீர்கள்?'' மனைவியின் 'மூடு' எனக்கு நேர் எதிராக இருந்தது.

''என்ன தருவது? அதுதான் மாதம் பத்து ரூபாய் சோலையாகச் சம்பளம் தருகிறேனே போதாதா...''

''ஆகா! இவர்தான் ஒருத்தர் அதிசயமாகச் சம்பளம் கட்டுகிறார்! உங்கள் பேச்சும் கணக்கும் விசித்திரம்தான்!'' மனைவியின் முகம் சப்பிட்டது.

''அப்பா! துக்ளக் தெலுங்குப் படம் மூன்றும் முறையாக 'மினர்வா'வில் வந்திருக்கிறது. மூந்தி நம்மால் போக முடியவில்லை. எங்கள் வெற்றியைக் கொண்டாட...''

''அதைவிட 'துக்ளக்'கான செயல் வேறு இல்லை. இந்த யூனிவர்ஸிடியில்தான் மூன்று வருடங்களாகப் படிப்பும், பரீட்சைகளுமே 'துக்ளக்'காக இருக்கிறதே! மார்ச் பரீட்சை நவம்பரிலும், செப்டம்பர் பரீக்ஷை பிப்ரவரியிலும் நடக்கின்றன! நீங்களும் எந்த காலேஜில் எந்த கோர்ஸ் சேர்ந்தால் வருடம் வீணாகாமல் இருக்கும் என்று தலைநகர் மாற்றின துக்ளக் மாதிரி தவிக்கிறீர்கள். ஏதோ இப்போதுதான்...''

''அடாடா... நீங்கள் சோஷல் ஸ்டடீஸில் புலி என்று தெரிகிறது!'' ஷோபா கடைக்குட்டியானதால் சற்று வாய்த் துடுக்கோடு என்னைக் கிண்டல் செய்தாள். ஆனால் மறு கணம் அவள் கருதி இறங்கியது. ''உங்களுக்குக் கிண்டல் பேச்சும் இருவினை பர்சும்தான்! அதுவும் நாங்கள் ஏதாவது கேட்டால்தான் உடனே வந்துவிடும் ... சித்ரகுப்தன் பேரேடு மாதிரி குடும்ப ''பட்ஜெட்'' கணக்குப் பேசுவீர்கள்!.....''

''மும்மொழித் திட்டம் அமுலாகும் நம் வீட்டில்தான் முதலில் தினம் இரண்டு பக்கம் இங்கிலீஷ், தமிழ் ,இந்தி கையெழுத்து எழுதிப் பழக வேண்டும் என்பீர்கள். அது தானே!'' ஷீலா முகம் சிவக்க உள்ளே சென்றாள்.

''ஏன்தான் குழந்தைகளின் குதூகலத்தைப் பாழடிக்கிறீர்களோ! அதுகளுக்கு என்ன



# கோடை மழை!

ஸ்ரீப்ரியா



தெரியும்...'' மனைவி இருதலைக் கொள்ளி எறும்பாகத் தவித்தாள்.

''எல்லாம் நீ கொடுக்கும் இடம். உன்னிடம் 'அப்ளிகேஷன்' போடும் போதே தட்டிக் கழித்திருந்தால் அப்பன் பொல்லாதவனாக மாட்டான். உனக்கும் ஆசை சினிமாவென்றால்...''

''ஆமாம், பொல்லாத ஆசை! தகாததைக் கேட்டு விட்டேன். உங்கள் சக்திக்கு மீறி...''

''சக்திக்கு மீறியோ, அடங்கியோ, ஒரு ஞாயிறு லீவு, வெய்யிலில் அலைச்சல், தலைவலி, அதற்கும் மேல் குறைந்தது பத்து ரூபாய் மாதக் கடைசியில் என்னால் விளக்க முடியாது...''

''வேண்டவே வேண்டாம். குழந்தைகளுக்கும் மனைவிக்கும் செலவிட முடியாது உங்களால்! அதே ஞாயிறு காலை எவனாவது வந்து குரல் கொடுத்தால் போதும். சாப்பிடக்கூட இல்லாமல் பட்டினியாக, பக்தி சிரத்தையாகப் படம் பார்த்து விட்டு, அவனையும் இழுத்துக் கொண்டு (டிக்கட் செலவையும் நீங்களே செய்தும்) சாப்பாட்டுக்கு வந்து நிற்பீர்கள்...''

''சீ மூடு வாயை.....''– உண்மை எரிச்சல் ஊட்டக் கூடியதுதான்... ''ரொம்பச் சமர்த்தாகப் பேசுவதாக எண்ணமோ? உன் ரோதனை பெரிய தலைவேதனை! சே. மனுஷனுக்கு வீட்டுக்கு வந்தால் நிம்மதி கிடையாது!'' என் கோபத்தைக் காட்டக் காப்பியை 'மடக்'கென்று விழுங்கி விட்டுச் சட்டையை மாட்டிக் கொண்டு வெளியே புறப்பட்டு விட்டேன். ஷீலா 'உர்'ரென்று உட்கார்ந்திருந்தாள். ஷோபா வார இதழ் ஒன்றால் முகத்தை மூடிக் கொண்டாள். ராஜி நீபத்தின் முன் அமர்ந்து ஏதோ முணுமுணுக்க ஆரம்பித்து விட்டாள். யாரும் என்னை எங்கே போகிறாய், எப்போது வருவாய் என்று கேட்கவில்லை. நானும் கூறவில்லை!

''ஹலோ குட் ஈவினிங். எங்கே, சார் இப்படி?''

''ஓ.. குட் ஈவினிங்! சும்மா ஒரு 'வாக்'. வீட்டில் ஒரே புழுக்கமாக இருந்தது.... நீ.. நீங்கள்?''



'' 'நீ' என்றே சொல்லலாமே...'' அவள் கலகலவென்று சிரித்தாள். ''நான் இன்னும் வீட்டுக்கே போகவில்லை. அங்கு உள்ளே நுழைந்து விட்டால் மீள முடியாது. நோயாளி மாமியார், ஆபீஸ் ஃபைல்களை வீட்டிலும் கட்டி அழும் கணவர். இந்தக் கணக்கு எப்படிப் போடுவது என்று பிடுங்கும் குட்டி நாத்தனார் ... சே ... ...''

''த்சோ...த்சோ...'' என் அனுதாபம் எல்லை கடந்தது.

''ஆண்கள் பாடு தேவலை, சார். அவர்கள் சுதந்திரம் பறிபோவதே இல்லை. பத்திரிகைகளில் வேண்டுமானால் 'ஊசல்' — ஜோக்காகப் புடவை தோய்க்கும் கணவன் என்றும் கும்மட்டி அடுப்பை விசிறும் அப்பாவி என்றும் படம் போடலாம்! ஆனால் பெண்கள் வாழ்வு கல்யாணத்துக்கு முன்தான். அதன் பின் அவள் — அதுவும் உத்தியோகத்துக்குப் போனால் — இரு புறமும் இடிபடும் மத்தளம் போல் தான்!'' அவள் இதழ்கள் சுழித்தன.

என் மனமும் சுழன்றது. ஒவ்வொரு வீட்டில் பெண்கள் எப்படியெல்லாமோ உழைத்துப் பாடுபடும் போது இந்த ராஜி தான்தான் என்னமோ கிழிப்பது போல் பேசுகிறாளே! என் மனம் ஏனோ எடை போட்டது.

''என்ன ஸார், யோசனை? எங்கே பயணம்? பஸ் வந்து விட்டதே...''

''ஓ... கமான். 'டாங்க் பண்டு' தான் நமது மெரினா. நீயும் அங்குதானே?'' நான் பஸ்ஸுக்குள் அவளையும் தள்ளி விட்டு ஏறினேன். அவள் மறுக்கவில்லை.

இந்த இடத்தில் அவளைப் பற்றி ஒரு வார்த்தை — அவள் பெயர் லதா — ஆமாம், மின்னல் கொடி! அவள் மேனி மின்னல் ஒளி; கூந்தல் அதன் பின்னுள்ள கருமேகம், கண்களோ நீல வானில் பதித்த நட்சத்திரங்கள். முத்துப் பற்கள்; வீச்சான கைகள்; நிமிர்ந்த கழுத்து; அகன்ற நெற்றியில் தீபச்சுடர்போல் திலகம்; 'மேக்கப்'பில் எடுப்பாக நிற்கும் வாணிஸ்ரீ என்று சொல்லலாமோ?

சிலுசிலுவென்ற காற்று 'எங்கோ' லயித்திருந்த என் நினைவுகளையும் கண்களையும் இழுத்தது. ''சார், இகண்டி ...'' என்னைத் தள்ளாதகுறையாக இறக்கினான் கண்டக்டர்.

ஒரு பெஞ்சில் அமர்ந்தோம் நானும், லதாவும். என்ன பேசுவது? இந்தக் கட்டம் வரை வந்து அருகருகே அமர்ந்தாயிற்று. ராஜியின் முணுமுணுப்பும், குழந்தைகளின் தொல்லைகளையும் மறந்து — ஓர் அழகியுடன் ஆனந்தமாக அமர்ந்த பின் என்ன செய்வது? இப்போது எங்களைப் பார்ப்பவர் என்ன நினைப்பார்கள்? என்னையும் அறியாத ஒரு பெருமிதம் என் உள்ளத்தில் எழுந்தது.

'' லதா! ஏன் பேசவேயில்லை?''

''ஓ. அழகாயிருக்கிறதே. பேசாதது நானா, நீங்களா? பாவம், இந்த இனிய சூழ்நிலையைக் கண்டதும் சாருக்கு வீட்டு நினைவு வந்து விட்டது போலிருக்கு... சாரின் மிஸஸ் கொடுத்து வைத்தவள் என்று எண்ணி உங்களின் இனிய கனவை நான் கலைக்கவில்லை...''

''ஓகோ, அப்படியானால் உன்னுடைய மௌனத்தைக் கண்டு இதே 'ரிகார்டை' நான் திருப்பிப் போட்டு உங்க கணவரைக் கண்டு பெருமூச்சு விடலாமல்லவா?''

மறுபடியும் 'கலகல'வென்ற சிரிப்பு! அது என்ன மாயச் சிரிப்போ! எதிரே ஒரு ஐஸ்கிரீம்காரன் எங்களை நம்பிக்கையுடன் நோக்கிக் கொண்டிருந்தான். பிஸ்கட் 'கப்'பில் ஐஸ்கிரீம் உருண்டை எங்கள் கைக்கு மாறியது.

''எனக்குச் சிறு வயது முதலே இந்த ஐஸ்கிரீம் பிடிக்கும். ஆனால் எங்கள் அப்பாதான் விலை அதிகம் என்று வாங்கித் தர மாட்டார். அந்த அளவுக்கு அவருக்கு வசதியும் இல்லை!'' அவள் இதழ்களை அசைத்து ஐஸ்கிரீமை நாவால் நீவிச் சுகமாக ரசித்தாள்.

நான் அவளை ரசித்துக் கொண்டிருந்தேன். இல்லை, ஐஸ்கிரீமாக உருகிக் கொண்டிருந்தேன். அதன்மேல் இருந்த பொறாமையால்! எல்லா அப்பாக்களுமே மோசம்தானோ?

அவள் திடீரென்று கேட்டாள்: ''சார்! விவாக ரத்து பற்றி உங்கள் கருத்தென்ன?''

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது.

''ஏன் திடீரென்று அப்படிக் கேட்கிறாய்?''

''இல்லை. சும்மா கேட்டேன்! பயந்து விட்டீர்களா? இன்னும் நாம் துணிந்து அந்த நிலைக்கு வந்து விடவில்லையே! ஐயோ! பெண்கள் தாராளமாகப் பழக ஆரம்பித்திருக்கிறார்களே — அதுவே பெரிய முன்னேற்றம்...'' அவள் கண்கள் ஏக்கத்துடன் என்னுள் எதையோ தேடின.

நான் ஒன்றும் 'அப்படிப்பட்டவ'னில்லை... என்னை நானே தேற்றிக் கொண்டேன். மனம் அப்படி நினைத்ததே தவிர கண்கள் என்னமோ 'குறுகுறு'வென்று அவளை விழுங்கின. 'ஆண் பிள்ளையே, இந்த இடத்தில் நீ யாருக்குப் பயப்படுகிறாய். இனிய, தனியான, சூழ்நிலை இது!' ஏதோ ஒன்று உள் மனத்தில் கிசுகிசுத்தது.

திடீரென்று வானம் இருண்டது; காற்று குளிர்ந்தது. கீழ்க்கோடியில் மின்னல் வெட்டிற்று.

''போகலாமா மழை வரும்போலிருக்கே?''

''வரட்டுமே, இங்கே பஸ் ஸ்டாப் கூரை நிழலில் ஒதுங்கி விடுவோம்.''

''சீ, ரொம்பப் பொல்லாதவர்.''

படபடவென்று மழைத் துளிகள் ஒன்றை ஒன்று விரட்டிக் கொண்டு வந்தன.

''ஐயே ... என் 'ஒயிட் சாரி' பாழ்தான்.'' அவள் மேல் புடவையை எடுத்து உதறித் தலைமேல் போர்த்திக் கொண்டாள். பஸ் ஸ்டாப் கூரையின் கீழ் கூட்டம் சேரவே எனக்கு ஏமாற்றம் மிகுந்தது.

''ஏய்...டாக்ஸி!''

''அடடா, எதற்கு?''

''புடவை நனைந்து பாழாகாமல் இருக்க!'' நான் விஷமமாகச் சிரித்தேன். நைலான் புடவை நனைந்து உடம்போடு ஒட்டிக்கொள்ள என் கற்பனை காற்றில் சிறகடித்துப் பறந்தது. டாக்சிக்காரன் மீட்டரைக் கீழே தள்ளி மணி அடித்து என்னை எழுப்பினான்.

''எக்கட போவாலண்டி?''

''மாரட்பள்ளி.''

''எங்கள் வீடுவரை போக வேண்டாம்!'' பெண்களுக்கே உரிய முன் ஜாக்கிரதையுடன் அவள் எச்சரித்தாள்.

''ஏன், அப்படி?'' நான் கண் சிமிட்டினேன்.

''ஏனா? சரி, அப்படியானால் முதலில் உங்கள் வீட்டெதிரே இறங்குவோம். அங்கிருந்து நான் நடந்தே போவேன்.''

---

உன்னுடைய சக்திக்கேற்ற வேலை கிடைத்தால் போதும் என்று ஆசைப்படாதே. உன்னுடைய வேலைக்கேற்ற சக்தி கிடைத்தாக வேண்டும் என்று ஆசைப்படு. (ஆல்பரி) - சரஸ்வதி பஞ்ச

''சே, நீ பொல்லாதவள்!''
சற்றுமுன் அவள் கொடுத்த சர்டிபிகேட்டைத் திருப்பி வாசித்தேன்.

வண்டி லிங்க்வேயில் திரும்பிற்று. காஸ்மண்டி வருமுன் மழை பெய்த சுவடேயில்லை. அவள் திடீரென்று டாக்ஸியை நிறுத்தச் சொன்னாள்.

''பரவாயில்லை. இதிலேயே செல்லலாம்.''

''இல்லையில்லை. எங்கள் வீட்டுக் கிழம் நேற்றே மாம்பழம் கேட்டது. சீசன் முடியப் போறதே! மழை வந்தால் கெட்டு விடும். பழம் வாங்க வேண்டும்.''

''அதனால் என்ன. உனக்கும் மாம்பழம் பிடிக்குமல்லவா...?''

நான் வாங்கித் தந்த மாம்பழப் பாக்கெட்டைக் கையில் வாங்கிய அவள் மாம்பழக் கன்னங்கள் சிவந்து மின்னின. மாம்பழச் சாறு அவள் இதழ்களில் ஊறுவதைக் கண்டேன்.

மாரட்பள்ளிப் பக்கம் மழையேயில்லை. 'கும்'மென்று உஷ்ணம் தகித்தது. மின்சார வெட்டினால் விளக்குகள் கூட இல்லை. பார்க்அருகில் இருவரும் இறங்கினோம். நான் டாக்ஸியை அனுப்பி வைத்தேன். ''ஸ்வீட் ட்ரீம்ஸ்'' அவள் கையசைத்து விடைபெற்றாள். அவள் கண்ணுக்கு மறையும் வரை நிலவொளியில் அவள் அழகை ரசித்த நான் பின் எதிர்த் திசையில் நடக்கலானேன்.

''மணி ஒன்பதாகிறது. ஊரெல்லாம் இருண்டு கிடக்கிறது. எங்கே போனீர்கள்?'' ராஜியின் குரலில் மாலைப் பொழுதின் கோபச் சாயை கூட இல்லை. 'பளிச்'சென்று விளக்குகள் எரிந்தன. மூலையில் ஷோபாவும் ஷீலாவும் கோபத்துடன் சாப்பிடாமல் உறங்குவது தெளிவாகத் தெரிந்தது. மௌனமாகச் சாப்பிட உட்கார்ந்தேன். பாதிப் பசி ஆறியது. தெரிந்தும் ராஜி என் முகத்தைப் பார்த்தாள்.

''என்ன இருந்தாலும் குழந்தைகள் முன்னால் நீங்கள் அப்படிப் பேசக்கூடாது. இல்லை ... இல்லை ... என்ற பாட்டைத்தான் சொல்கிறேன். அதுகளுக்கு என்ன தெரியும்? ஏன் தெரிய வேண்டும்? வேறு

# 27 DOWN

எளிய கதை ரமேஷ் பக்ஷியுடையது. ரயில்வேயில் என்ஜின் டிரைவராக வேலை பார்த்து விபத்தில் கால் நொண்டியான தந்தை, கலை உலகில் கால் எடுத்து வைக்க விரும்பும் தன் தனயன் சஞ்ஜய். ரயில்வேயில்தான் உத்தியோகம் பார்க்க வேண்டும் என்று விரும்புகிறார். பிடிவாதக்காரர்; அவரது பிடிவாதம் வெல்கிறது. தனயனுக்கு வேலை வாங்கிக் கொடுப்பதில் மட்டுமல்ல; திருமணம் செய்யும் விஷயத்திலும் கூட. பலன் காதலும் தோல்வி; கலை ஆர்வத்துக்கும் தோல்வி. ரயில்வே கண்டக்டராக வேலை பார்க்கும் சஞ்ஜய் நிம்மதி நாடி பம்பாயிலிருந்து பனாரஸ் செல்லும் 27 டௌன் வண்டியில் புறப்படுகிறான். அதுவே கதைத் தலைப்பு!

புது முகம் எம். கே. ரைனா அலட்டிக் கொள்ளாமல் நடித்து, 'சஞ்ஜய்' பாத்திரத்துக்கு உயிர் ஊட்டுகிறார். அவருடைய காதலி ஷாலினியாக வரும் ராகி அனுபவப் பட்டவராயிற்றே! நடிப்பில் சோடை போவாரா?

டைரக்டர் அவதார்கிருஷ்ண கௌல் திரையுருவம் கொடுத்திருக்கும் முறை கதைக்கு நிறைவைத் தருகிறது.

ஒளிப்பதிவில் அபூர்வ கிஷோர் பீர் தமது பெயரில் உள்ள அபூர்வத்தை நிலை நாட்டிக்கொள்ள முயன்றிருக்கிறார். விக்டோரியா டெர்மினலில் வண்டி வந்து நின்றதும் மக்கள் கடல் அலை பாய்ந்து வருகிறதே அது ஒன்றே போதும்!

27 டௌன் பொருளாதார ரீதியில் 'டௌ'னாயிற்றோ என்னவோ கலைப் படமாக உயர்ந்து இந்திய அரசின் தேசப் பரிசுகளைப் பெற்றுள்ளது. - ரா. வி.



ஏதாவது சாக்குச் சொல்லி சினிமாத் திட்டத்தை நிறுத்தியிருக்கலாம்.''

மூலையில் தூங்கும் குழந்தைகளைப் பார்த்தேன். பரீட்சையில் பாஸான சந்தோஷத்தில் மூடிய இமைகளுக்குள் அவை என்னென்ன சினிமாக்கள் கண்டனவோ! அப்பாவுக்குச் செலவு வைக்காமல் ரசிக்கின்றனவோ!

ஆனால் ... அப்பா?

வெளியே திடீரென்று காற்று மண்ணை வாரித் தூவிற்று. என்னுள் ஏதோ ஒன்று குற்ற உணர்வுடன் ஏமாந்து கசிந்து வழிந்தது. 'குழந்தைகள் முன்னால் நம் இல்லாமையைக் காட்டுவானேன்?' என்கிறாள் ராஜி. அவள் தாய்! பெண்மையின் பூரண வடிவு. ஆனால் நான்? ஆண்மகனான நான் 'எவள்' முன்போ இல்லாமையைக் காட்டிக் கொள்ளாதிருக்க, இல்லை, எட்டாத ஒன்றுக்காக — அது எட்டாது, எட்டக் கூடாது என்ற அறிவு இருந்தும் மாதக்கடைசியில், சே...!

ஆமாம். அவள் — லதா — அவளும் பெண்தானே ராஜியைப் போல? அவள் எப்படித் துணிந்து வந்தாள் என்னுடன்? அவள் கண்ணும், மூக்கும், உடம்பும், பகட்டும்....

''வேகமாக நட—மழை வரும் போல் இருக்கிறது. கோடை மழை பிசாசாக வரும்!''

''கோடை மழைதானே, வந்தபடி போய் விடும். பெய்யும்போது குளிர்ச்சியாக இருந்தாலும் சூட்டைக் கிளப்பித்தான் விடும், அது. முறையாகப் பருவத்தில் வரும் மழைதான் பூமிக்குக் குளிர்ச்சி!'' தெருவில் போனவர்கள் பேசிக்கொண்டேபோனார்கள். எனக்குப் புரிந்துவிட்டது.

ஆம், அவள் — லதா — கோடைமழைதான். பிரமாத இடியும் மின்னலும் ஆர்ப்பாட்டமும்தான் — குளுமை பிறக்காது — பருவ மழையின் குளிர்ச்சி ராஜி— குடும்பம் — குழந்தைகள்தாம். இந்த ஞானோதயம் காலங்கடந்தது!

டெரிலின் ஷர்ட்டுக்குள் எட்டிப் பார்த்த பர்ஸ் சிரித்தது! இந்தப் புத்திக் கொள்முதல் பெற பலியான அதனுடைய பரிதாபச் சிரிப்பு அது!

பதினாறாம் அத்தியாயம்

## அரண்மனைப் பூங்கா

திருநாவுக்கரசரின் மடத்தில் குலச்சிறையாரை மங்கையர்க்கரசி பார்த்து ஏறக்குறைய ஒரு வாரம் ஆயிற்று. இந்த ஒரு வாரமும் செம்பியன் வளவனுடைய மகளுக்கு ஒரு யுகமாகச் சென்றது. பாண்டிய குமாரர் இன்று வருவார், நாளை வருவார் என்று அரண்மனையில் பேச்சாயிருந்தது. நெடுமாற பாண்டியன் வரவைக் குறித்து மங்கையர்க்கரசிக்கு எவ்வித ஆவலும் ஏற்படவில்லை யென்றாலும், பாண்டியனோடு அன்று தான் மடத்தில் பார்த்த வாலிபனும் வருவான், அவனிடம் அவனுடைய சிநேகிதனைப் பற்றி விசாரிக்கலாம் என்ற ஆவல் அவளுடைய மனத்தில் பொங்கிக் கொண்டிருந்தது.

இரண்டு வருஷங்களுக்கு முன்னால் கார்காலத்தில் விடா மழை பெய்து கொண்டிருந்த ஒரு நாள் மாலை நடந்த சம்பவமும் மங்கையர்க்கரசியின் மனத்தில் அடிக்கடி தோன்றிக் கொண்டிருந்தது. அன்று இந்தப் பாண்டிய வாலிபனும் இவனுடைய சிநேகிதன் ஒருவனும் மழையில் சொட்ட நனைந்தவண்ணம் செம்பியன் வளவனின் அரண்மனை வாசலில் வந்து நின்று இரவு தங்க இடம் கேட்டார்கள். விருந்தோம்புவதில் இணையற்ற செம்பியன் வளவனும் அவர்களை ஆதரவுடன் வரவேற்று உபசரித்தான். வந்த இளைஞர்கள் இருவரும் தங்களை வர்த்தகர்கள் என்று சொல்லிக் கொண்டார்கள். சிரிக்கச் சிரிக்கக் குதூகலமாய்ப் பேசினார்கள். அப்புராதன சோழ அரண்மனையில் அன்று வெகுநேரம் வரை ஒரே கோலாகலமா யிருந்தது.

மங்கையர்க்கரசியின் தந்தை அவளிடம் இரகசியமாக, ''இவர்கள் வர்த்தகர்கள் என்று சொல்லிக்

# சிவகாமியின் சபதம்

அமரர் கல்கி

கொள்கிறீர்கள் அல்லவா? வெறும் பொய்; நான் சொல்கிறேன், கேள்! இவர்கள் மாறுவேடம் பூண்ட பெரிய குலத்து இராஜகுமாரர்கள்!'' என்று சொன்னார். இது மங்கையர்க்கரசிக்கும் மகிழ்ச்சி தந்தது. ஏனெனில், அந்த இளைஞர்களில் ஒருவன் தன்னுடைய உள்ளத்தை எப்படியோ மெள்ள மெள்ளக் கவர்ந்து கொண்டிருப்பதை அவள் உணர்ந்தாள்.

மறுநாள் உதயமானதும் இளைஞர் இருவரும் பிரயாணமாயினர். ஆனால், போவதற்கு முன்னால் அவர்களில் ஒருவன், அதாவது குலச்சிறையின் சிநேகிதன், ''மீண்டும் ஒரு நாள் திரும்பி வருவோம்'' என்று உறுதி கூறியதோடு, மங்கையர்க்கரசியிடம் நயன பாஷையில் அந்தரங்கமாகவும் சில விஷயங்களைச் சொன்னான்.

மாகக் குணமாகவில்லை என்றும் பேசிக் கொண்டார்கள்.

ஆனால், குலச்சிறையைத் தனிமையில் சந்தித்து விசாரிக்க வேண்டுமென்னும் மங்கையர்க்கரசியின் மனோரதம் நிறைவேறும் என்பதாக மட்டும் காணப்படவில்லை.

புவனமகாதேவி தினந்தோறும் சிவ பூஜை செய்த பிறகு தன் மருமகள் வானமாதேவிக்குப் பிரசாதம் அனுப்புவது உண்டு. மங்கையர்க்கரசி தானே பிரசாதம் எடுத்துக் கொண்டு போவதாகச் சொல்லித் தினந்தோறும் வானமாதேவியின் மாளிகைக்குச் சென்றாள். அம்மாளிகையில் இருக்கும்போது மங்கையர்க்கரசியின் கண்கள் நாற்புறமும் சுழன்று சுழன்று தேடியும் அந்த வாலிபன் காணப்படவில்லை.



இந்தச் சம்பவத்தைப் பற்றிச் சில நாள் வரையில் தந்தையும் மகளும் அடிக்கடி பேசிக் கொண்டிருந்தார்கள். பிறகு வெறுங் கனவு என்று எண்ணி மறந்தார்கள்.

அப்போது மங்கையர்க்கரசியின் மனங்கவர்ந்த அதே சுந்தரபுருஷன் தான் இப்போது சில நாட்களாக அவளுடைய பயங்கரக் கனவுகளிலே தோன்றிக் கொண்டிருந்தவன். எனவே, தாய் தந்தையின் பாதுகாப்பற்ற அந்த அநாதைப் பெண் இப்போது பெரிதும் பரபரப்புக் கொண்டிருந்ததில் வியப்பு ஒன்றுமில்லையல்லவா?

* * *

ஒரு வாரத்துக்குப் பிறகு ஒரு நாள் காஞ்சி அரண்மனை அல்லோலகல்லோலப் பட்டது. நெடுமாற பாண்டியன் அவனுடைய பரிவாரங்களுடன் காஞ்சிக்கு வந்து விட்டதாக மங்கையர்க்கரசி அறிந்தாள்.

வானமாதேவியின் நடு மாளிகையில் நெடுமாறன் தங்கியிருப்பதாகவும், அவனுக்கு இன்னும் உடம்பு பூரண

ஒரு நாள் மனத் துணிவை வரவழைத்துக் கொண்டு புவன மகாதேவியையே கேட்டாள். ''அம்மா! அன்று சைவத் திருமடத்தில் ஓர் இளைஞரைப் பார்த்தோமே? அவர் பாண்டிய குமாரரோடு வந்திருப்பதாகத் தெரியவில்லையே?'' என்றாள்.

அதற்குப் புவனமகாதேவி, ''அதை ஏன் கேட்கிறாய், குழந்தாய்? பாண்டிய குமாரன் நிலைமை ரொம்பவும் கவலைக்கிடமாயிருக்கிறது....'' என்பதற்குள், ''அடடா! அப்படியா? அவருக்கு உடம்பு இன்னும் குணமாகவில்லையா? அதனால்தான் வானமாதேவி எப்போதும் ஒரே கவலையாயிருக்கிறாற்போல் இருக்கிறது. முன்னேயெல்லாம் நான் சிவபூஜைப் பிரசாதம் கொண்டு போனால் முகமலர்ச்சியுடன் வாங்கிக் கொண்டு என்னிடமும் அன்பாக வார்த்தையாடுவார். இப்போதெல்லாம் ஒரு வார்த்தைகூடப் பேசுவதில்லை!'' என்றாள்.

''ஆமாம், குழந்தாய்! வானமாதேவி கவலைப்படுவதற்கு ரொம்பவும் காரணம் இருக்கிறது. நெடுமாறனுக்கு

உடம்பு இப்போது சௌகரியமாகி விட்டது. ஆனால், அவனுடைய மனத்தைச் சமணர்கள் ரொம்பவும் கெடுத்திருக்கிறார்கள். அவனோடு பாண்டிய நாட்டின் புகழ்பெற்ற வீர மறவர் சைனியம் வந்திருக்கிறது. அந்தச் சைனியத்தைத் திருக்கழுக்குன்றத்தில் தங்கச்செய்திருக்கிறார்கள். இலங்கை இளவரசனும் நாம் அன்று பார்த்த குலச்சிறை என்ற வாலிபனும் திருக்கழுக்குன்றத்திலே தான் இருக்கிறார்களாம். குழந்தாய்! விபரீதம் ஒன்றும் நேராதிருக்க வேண்டுமே என்று அம்பிகை பாகனை அல்லும் பகலும் பிரார்த்தனை செய்து கொண்டிருக்கிறேன். என்னைக் காட்டிலும் வானமாதேவியின் தலையில் பெரிய பாரம் சுமந்திருக்கிறது. பாவம்! அவள் ஒரு வாரமாய்த் தூங்கவில்லை



யாம்!'' என்றாள் மகேந்திர பல்லவரின் பட்டமகிஷி.

பாண்டிய குமாரனுடைய வரவினால் என்ன விபரீதம் ஏற்படக் கூடும், எதற்காக எல்லோரும் இவ்வளவு கவலையில் ஆழ்ந்திருக்கிறார்கள் என்பனவெல்லாம் மங்கையர்க்கரசிக்குத் தெளிவாக விளங்கவில்லை. அதைப் பற்றி அவ்வளவாக அவள் கவனம் செலுத்தவும் இல்லை. அவளுக்குத் தன்னுடைய கவலையே பெரிதாக இருந்தது. குலச்சிறை என்று பெயர் சொன்ன வாலிபனை ஒருவேளை தான் பார்க்க முடியாமலே போய்விடுமோ, அவனுடைய சிநேகிதனைப் பற்றி விசாரித்துத் தெரிந்து கொள்ள முடியாமற் போய்விடுமோ என்ற ஏக்கம் அவள் உள்ளத்தில் குடி கொண்டு வேறு எந்த விஷயத்தைப் பற்றியும் சிந்திக்க முடியாமல் செய்தது.

இத்தகைய மன நிலைமையில் ஒரு நாள் மாலை நேரத்தில் அரண்மனைப் பூங்காவனத்தில் புவனமகாதேவியின் சிவபூஜைக்காக மங்கையர்க்கரசி மலர் பறித்துக் கொண்டிருந்தாள். பன்னீர், மந்தாரை, பொன்னரளி, செவ்வரளி முதலிய செடிகளிலிருந்தும், சம்பங்கி, சாதி, மல்லிகைக் கொடிகளிலிருந்தும் அவளுடைய மலர்க் கரங்கள் புஷ்பங்களைப் பறித்துப் பூக்கூடையில் போட்டுக் கொண்டிருந்தன. ஆனால், அவளுடைய உள்ளமோ இரண்டு வருஷங்களுக்கு முன்பு விடாமழை பெய்த ஒரு நாள் சாயங்காலம் தன் தந்தையின் புராதன மாளிகையைத் தேடி வந்த இளைஞர்களைப் பற்றியும், அவர்களில் ஒருவன் தன் உள்ளத்தைக் கொண்டு போனதைப் பற்றியும் சிந்தித்துக்கொண்டிருந்தது. 'ஒரு நாள் உன்னைத் தேடிக் கொண்டு மறுபடியும் வருவேன்' என்று அவன் கூறிய வாக்குறுதி நீரின் மேல் எழுதிய எழுத்துத்தான் போலும்!.... 'இந்த உலகில் எனக்கு ஒரே துணையாக இருந்த தந்தையும் போர்க்களத்துக்குப் போய்விட்டார். இனி மேல் என் கதி என்ன ஆகப் போகிறது?' என்று எண்ணிய போது மங்கையர்க்கரசியின் கண்களில் கண்ணீர் துளித்தது.

செடி கொடிகளின் வழியாக யாரோ புகுந்து வருவது போன்ற சலசலப்புச் சத்தம் கேட்டு மங்கையர்க்கரசி சத்தம் வந்த திசையை நோக்கினாள். ஆம்; யாரோ ஒரு மனிதர் அந்த அடர்ந்த பூங்காவின் செடிகளுக்கிடையே நுழைந்து வந்து கொண்டிருந்தார். ஆனால், அவருடைய முகம் தெரியவில்லை.

அந்தப்புரத்துப் பூந்தோட்டத்தில் அவ்விதம் அலட்சியமாக வரும் மனிதர் யாராயிருக்கும்? மாமல்ல சக்கரவர்த்தியைத் தவிர வேறு ஆண் மக்கள் யாரும் அந்தத் தோட்டத்துக்குள் பிரவேசிக்கக் கூடாதென்று மங்கையர்க்கரசி கேள்விப்பட்டிருந்தாள். பூஞ்செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றி அந்தப் பூங்காவனத்தைப் பராமரிப்பதற்குக்கூட ஸ்திரீகளே நியமிக்கப்பட்டிருந்தார்கள். அப்படியிருக்க, இவ்வளவு துணிச்சலாக அந்தத் தோட்டத்தில் நுழைந்து வரும் அந்நிய மனிதர் யார்?

யாராயிருந்தாலும் இருக்கட்டும், நாம் திரும்பிப் புவன மகாதேவியின் அரண்மனைக்குப் போய்விடலாம் என்ற எண்ணத்தோடு மங்கையர்க்கரசி சட்

டென்று திரும்பி நடக்கத் தொடங்கினுள்.

அதே சமயத்தில், ''யார் அம்மா, அது? இந்தப் பூந்தோட்டத்துக்குள் தெரியாத்தனமாகப் புகுந்துவிட்டேன். திரும்பிப் போக வழி தெரியவில்லை. வானமாதேவியின் அரண்மனைக்கு எப்படிப் போக வேண்டும்? கொஞ்சம் வழி சொல்லு, அம்மா!'' என்று யாரோ சொல்லுவது கேட்டது.

அவ்விதம் சொல்லிய குரலானது மங்கையர்க்கரசியின் தேகம் முழுவதையும் ஒரு குலுக்குக் குலுக்கிவிட்டது. அவளுடைய காலடியிலிருந்த தரை திடீரென்று நழுவிப் போவது போல் இருந்தது. அந்தப் பூங்காவனத்திலுள்ள செடி கொடிகள் எல்லாம் அவளைச் சுற்றி வருவதாகத் தோன்றியது. பக்கத்திலிருந்த மந்தார மரத்தின் கிளையைப் பிடித்துக் கொண்டு கீழே விழாமல் சமாளித்தாள். அவளுடைய இடக் கையில் பிடித்திருந்த வெள்ளிப் பூக்குடை மட்டும் நழுவிக் கீழே விழ, அதிலிருந்த பல நிறப் புஷ்பங்கள் தரையில் சிதறின.

''ஓஹோ! பயந்து போய்விட்டாயா என்ன? ஏதும் தவருக எண்ணிக்கொள்ளாதே, அம்மா! உண்மையாகவே வழி தெரியாததனுல்தான் கேட்டேன். நான் இந்த ஊர்க்காரன் அல்ல; பாண்டிய நாட்டான். வானமாதேவியின் மாளிகை எந்தத் திசையில் இருக்கிறது என்று சொன்னுல் போதும், போய்விடுகிறேன். இந்தத் தோட்டத்தில் வேறு யாருமே காணப்படாமையால் உன்னைக் கேட்கும்படி நேர்ந்தது. நீ யார் என்றுகூட எனக்குத் தெரியாது'' என்று அந்த மனிதன் சொல்லி வந்தபோது மங்கையர்க்கரசிக்குப் பூரண தைரியம் வந்துவிட்டது. சட்டென்று தான் பிடித்திருந்த செடியின் கிளையை விட்டுவிட்டுத் திரும்பிப் பார்த்தாள்.

அவள் நினைத்தது தவருகப் போகவில்லை.

ஆம், அவன்தான்!

அன்றொரு நாள் விடாமழை பெய்த இரவு தன் தந்தையின் வீட்டுக்கு அதிதியாக வந்து தன் உள்ளங்கவர்ந்து சென்ற கள்வன்தான்!

மங்கையர்க்கரசியின் அதிசயத்தைக் காட்டிலும் பாண்டிய குமாரனுடைய அதிசயம் பன்மடங்கு அதிகமாயிருந்தது.

''ஆ!'' என்ற சத்தத்தைத் தவிர வேறொரு வார்த்தையும் அவன் வாயிலிருந்து வரவில்லை.

பேச நா எழாமல் இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் அடங்கா அதிசயத்தோடும் ஆர்வத்தோடும் பார்த்துக் கொண்டு கைதேர்ந்த சிற்பி அமைத்த கற்சிலைகளைப் போல் சற்று நேரம் நின்று கொண்டிருந்தார்கள்.

கடைசியாக, பாண்டிய குமாரன், உணர்ச்சியாலும் வியப்பாலும் கம்மிய குரலில், ''பெண்ணே! உண்மையாக நீதாஞ? செம்பியன் வளவன் மகள் மங்கையர்க்கரசிதாஞ? அல்லது இதுவும் என் சித்தப்பிரமையா?'' என்ருன்.

மங்கையர்க்கரசி மறுமொழி சொல்ல விரும்பினுள். ஆனுல், வாயிலிருந்து வார்த்தை ஒன்றும் வரவில்லை. கண்ணிலிருந்து கண்ணீர்தான் வந்தது.

உடனே பாண்டிய குமாரன் அளவில்லாத ஆர்வத்துடன் அவள் அருகில் வந்து, ''பெண்ணே! இது என்ன? ஏன் உன் கண்களில் கண்ணீர் பெருகுகிறது? ஏதேனும் நான் பெரிய பிசகு செய்துவிட்டேஞ? என்ன செய்துவிட்டேன்?'' என்று பரபரப்புடன் வினவினுன்.



மங்கையர்க்கரசி விம்மலுக்கிடையில் ''ஐயா! அந்தத் துரதிர்ஷ்டம் பிடித்த மங்கையர்க்கரசி நான்தான்!'' என்ருள்.

''ஏன் இப்படி மனம் நொந்து பேசுகிருய்? ஏன் இப்படிக் கண்ணீர் விடுகிருய்? கொஞ்சமும் எதிர்பாராதவிதமாய் உன்னை இங்கே பார்த்ததும், எனக்குச் சொல்ல முடியாத சந்தோஷம் உண்டாயிற்று. பிறவிக் குருடன் கண் பெற்றது போன்ற மகிழ்ச்சி அடைந்தேன். கடல் கடைந்த தேவர்கள் அமிர்தம் எழக் கண்டதும் அடைந்த ஆனந்தத்தை நானும் அடைந்தேன். எவ்வளவோ மனக் குழப்பத்திலும் கவலையிலும் ஆழ்ந்திருந்தவன் உன்னைக் கண்டதும் அதையெல்லாம் மறந்து ஒரு கணம் எல்லையற்ற குதூகலம் அடைந்தேன். ஆனுல், உன்னுடைய விம்மலும் கண்ணீரும் அந்த மகிழ்ச்சியை யெல்லாம் போக்கி என்னை மறுபடியும் சோகக் கடலில் மூழ்க



அடித்துவிட்டது. உனக்கு என்ன துயரம் நேர்ந்தது? ஏன் உன்னைத் துர்திர்ஷ்டக்காரி என்று சொல்லிக் கொள்கிறாய்? உன் துயரத்துக்கும் துரதிர்ஷ்டத்துக்கும் நான் எந்தவிதத்திலாவது காரணம் ஆனேனா? ஏற்கனவே நான் பெரிய மனத் தொல்லைகளுக்கும் சங்கடங்களுக்கும் ஆளாகியிருக்கிறேன். அவ்வளவுக்கும் மேலே, உனக்கு எவ்விதத்திலாவது துன்பம் கொடுத்திருப்பேனானால், இந்த வாழ்க்கைதான் என்னத்திற்கு? உயிரை விட்டுவிடலாம் என்று தோன்றுகிறது.''

இவ்வாறு நெடுமாறன் உண்மையான உருக்கத்தோடு சொல்லி வந்தபோது, பேதைப் பெண்ணாகிய மங்கையர்க்கரசி பல முறை குறுக்கிட்டுப் பேச விரும்பினாள் என்றாலும், அதற்கு வேண்டிய தைரியம் இல்லாதபடியால் விம்மிக் கொண்டே சும்மா நிற்க வேண்டியதாயிற்று. கடைசியில், பாண்டிய குமாரன் உயிர் விடுவதைப் பற்றிப் பேசியதும் அவளுக்கு எப்படியோ பேசுவதற்குத் தைரியம் ஏற்பட்டு, ''ஐயா! தங்களால் எனக்கு எவ்விதக் கஷ்டமும் ஏற்படவில்லை!'' என்றாள்.

''அப்படியானால் என்னைப் பார்த்ததும் நீ கண்ணீர் விடுவதற்கும் விம்மி அழுவதற்கும் காரணம் என்ன? இரண்டு வருஷ காலமாக உன்னை மறுபடியும் எப்போது பார்க்கப் போகிறோம் என்று ஓயாமல் சிந்தித்துக் கொண்டிருந்தேன். மீண்டும் உன்னைச் சந்திக்கும் போது சந்தோஷத்தினால் உன் முகம் எப்படிச் சூரியனைக் கண்ட செந்தாமரையைப் போல் மலரும் என்று கற்பனை செய்து சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தேன். ஆனால் அதற்கு நேர்மாறாக, என்னைப் பார்த்ததும் உன் முகம் அஸ்தமன அரக்கனைக் கண்ட தாமரையைப் போல் வாடிக் குவிந்தது. உன் கண்களும் கண்ணீர் பெருக்கின. ஏன் அப்படி?''

**பா**ண்டிய குமாரனுடைய கேள்விக்கு மறுமொழி சொல்லாமல் மங்கையர்க்கரசி, ''ஐயா! தாங்கள் சொன்னது உண்மைதானா? என்னைத் தாங்கள் அடியோடு மறந்து விடவில்லையா? என்னை மறுபடியும் சந்திக்கும் உத்தேசம் தங்களுக்கு இருந்ததா?'' என்று கேட்டாள்.

''அதைப் பற்றி உனக்கு ஏன் சந்தேகம் ஏற்பட்டது? மீண்டும் உன்னைச் சந்திப்பதற்குரிய சந்தர்ப்பத்தை ஓயாமல் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். கடைசியில் அந்தச் சந்தர்ப்பம் கிடைத்தது. மதுரையிலிருந்து இந்த நகரத்துக்கு வரும் வழியில் அன்றொரு நாள் விடாமழை பெய்த இரவில் எனக்கு அடைக்கலம் தந்த செம்பியன் வளவன் மாளிகையை அடைந்தேன். அந்த மாளிகை பூட்டிக் கிடந்ததைப் பார்த்ததும் எனக்குண்டான ஏமாற்றத்தைச் சொல்லி முடியாது. உலகமே இருள் அடைந்துவிட்டதாக எனக்குத் தோன்றியது. அப்புறம் குலச்சிறை உன்னை இந்நகரில் பார்த்ததாகச் சொன்ன பிறகு கொஞ்சம் மன அமைதி உண்டாயிற்று'' என்றான் நெடுமாறன்.

''ஆகா! அவர் வந்து சொன்னாரா? அப்படியானால், தாங்களும் பாண்டிய குமாரரிடம் உத்தியோகத்தில் இருக்கிறீர்களா?'' என்று மங்கையர்க்கரசி கேட்டாள்.

நெடுமாறனுடைய முகத்தில் ஒரு கணம் மர்மமான புன்னகை தோன்றி மறைந்தது. தான் இன்னான் என்பதை மங்கையர்க்கரசி இன்னமும் தெரிந்து கொள்ளாமலே பேசுகிறாள் என்பதை அப்போதுதான் அவன் உணர்ந்தான். அந்தத் தவறுதலை இன்னமும் நீடிக்கச் செய்வதில் அவனுக்குப் பிரியம் ஏற்பட்டது.

''ஆம்! பாண்டிய குமாரரிடம்தான் நானும் உத்தியோகத்தில் அமர்ந்திருக்கிறேன். அதைப் பற்றி உனக்கு ஒன்றும் ஆட்சேபம் இல்லையே?'' என்று கேட்டான்.

மங்கையர்க்கரசி, ''எனக்கு என்ன ஆட்சேபம்? தாங்கள் நல்ல பதவியில் இருந்தால் எனக்குச் சந்தோஷம் தானே? தங்களுடைய சிநேகிதரைத் திருநாவுக்கரசர் மடத்தில் பார்த்த போது என் மனத்திலும் அம்மாதிரி எண்ணம் உண்டாயிற்று. ஆனால், அதையெல்லாம் பற்றி இனி என்ன? என் குலதெய்வம் தங்களையேதான் என் முன் கொண்டு வந்துவிட்டதே!'' என்று ஆர்வம் பொங்கக் கூறினாள்.

''ஆனாலும் உன் தெய்வம் என்னை உன் முன்னால் கொண்டு வந்து நிறுத்திய போது நீ சந்தோஷப்பட்டதாகத்

தெரியவில்லையே? உன்னைத் துரதிர்ஷ்டக்காரி என்று சொல்லிக் கொண்டு கண்ணீர் விட்டாயே?'' என்று நெடுமாறன் விஷமப் புன்னகையுடன் கேட்டான்.

''சுவாமி! எதிர்பாராதபோது தங்களைத் திடீரென்று பார்த்ததில் பேசத் தெரியாமல் திகைத்து நின்றேன். தாங்களும் என்னைத் தெரிந்து கொள்ளாதது போல் ஒரு மாதிரியாகப் பேசவே, எனக்குக் கண்ணீர் வந்துவிட்டது! என்னுடைய பேதைமையைப் பற்றிச் சொல்லிக் காட்டாதீர்கள்!'' என்று மங்கையர்க்கரசி கூறியபோது அவளுடைய கண்களில் மறுபடியும் கண்ணீர் துளித்தது.

''என் கண்ணே! என்னை மன்னித்து விடு! இந்த மூர்க்கன் உன் கண்களில் மறுபடியும் கண்ணீர் வரச் செய்தேனே?'' என்று சொல்லிக் கொண்டு நெடுமாறன் தன் அங்கவஸ்திரத்தின் தலைப்பினால் அவளுடைய கண்ணீரைத் துடைத்தான்.

சற்றுப் பொறுத்த மங்கையர்க்கரசி, ''சுவாமி! வெகு நேரம் ஆகிவிட்டது! பூஜை நேரம் நெருங்கிவிட்டது. நான் போக வேண்டும்'' என்றாள்.

''கட்டாயம் போகத்தான் வேண்டுமா?'' என்று நெடுமாறன் விருப்பமில்லாத குரலில் கேட்டான்.

''ஆம், போக வேண்டும். புவனமகாதேவி காத்துக் கொண்டிருப்பார்கள். ஒருவேளை நான் வரவில்லையே என்று தாதியை அனுப்பினாலும் அனுப்புவார்கள்.''

''அப்படியானால் நாளைய தினம் இதே நேரத்தில் இங்கு நீ வர வேண்டும். தவறக் கூடாது. மேலே நம்முடைய காரியங்களைப் பற்றி ஒன்றுமே பேச வில்லையே?'' என்றான் நெடுமாறன்.

மங்கையர்க்கரசி திடுக்கிட்டவளாய் நெடுமாறனை' நிமிர்ந்து பார்த்து, ''பாண்டிய குமாரர் வாதாபி யுத்தத்துக்குப் போனால் நீங்களும் அவரோடு போவீர்களா?'' என்று கேட்டாள்.

''ஆமாம், போக வேண்டியதுதானே? ஏன் கேட்கிறாய்? நான் போருக்குப் போவது உனக்குப் பிடிக்கவில்லையா?'' என்றான் நெடுமாறன்.

''எனக்குப் பிடிக்கத்தான் இல்லை. யுத்தம், சண்டை என்பதே எனக்குப் பிடிக்கவில்லை. எதற்காக மனிதர்கள் ஒருவரையொருவர் துவேஷிக்க வேண்டும்? ஏன் ஒருவரையொருவர் கொன்று கொண்டு சாக வேண்டும்? ஏன் எல்லாரும் சந்தோஷமாகவும் சிநேகமாகவும் இருக்கக் கூடாது?'' என்றாள் மங்கையர்க்கரசி.

நெடுமாறன் மீண்டும் மர்மமான புன்னகை புரிந்து, ''யுத்தத்தைப் பற்றி உன்னுடைய அபிப்பிராயத்தைப் பாண்டிய குமாரரிடம் சொல்லிப் பார்க்கிறேன். ஒரு வேளை அவருடைய மனம் மாறினாலும் மாறலாம். எல்லாவற்றுக்கும் நாளை மாலை இதே நேரத்துக்கு இங்கு நீ கட்டாயம் வரவேண்டும்; வருவாயல்லவா?'' என்றான்.

''அவசியம் வருகிறேன். இப்போது ரொம்ப நேரமாகி விட்டது. உடனே போக வேண்டும்'' என்று கூறி மங்கையர்க்கரசி கீழே கிடந்த புஷ்பக்கூடையை எடுப்பதற்குக் குனிந்தாள்.

நெடுமாறனும் குனிந்து தரையில் சிதறிக் கிடந்த புஷ்பங்களைக் கூடையில் எடுத்துப் போட்டு மங்கையர்க்கரசியின் கையில் அதைக் கொடுத்தான். அப்படிக் கொடுக்கும் போது பயபக்தியுடன் பகவானுடைய நிர்மால்யத்தைக் கண்ணில் ஒற்றிக் கொள்வது போல் அவளுடைய மலர்க் கரத்தைப் பற்றித் தன் கண்களில் ஒற்றிக் கொண்டான்.

மெய்சிலிர்ப்பு அடைந்த மங்கையர்க்கரசி பலவந்தமாகத் தன் கையை நெடுமாறனுடைய பிடியிலிருந்து விடுவித்துக் கொண்டு புவனமகாதேவியின் அரண்மனையை நோக்கி விரைந்து நடந்தாள்.

(தொடரும்)



சிறுகதை :

உரிமையும்
கடமையும்
— ஆர். சூடாமணி



கலைஞரின் 'நெஞ்சுக்கு நீதி' வாழ்க்கை வரலாற்றில் தொடங்கி, பயண இலக்கியம், பக்தி இலக்கியம், நாவல், கவிதை போன்ற பலதரப்பட்ட நூல்களின் விமர்சனங்கள்.



உலகம் காணாத
உயிரினங்கள்!
விஞ்ஞான ரீதியான
விநோத உருவங்கள்!

அடுத்த இதழில்

தினசரி உங்கள்
உடலுக்குத் தேவை
இந்த 23 அத்தியாவசிய
ஊட்டச் சத்துக்கள்.




CMGC-6-216 TM

# காம்ப்ளான்
# இந்த 23-ஐயும் தருகிறது.

புரதம்
திசுக்களையும் செல்களையும்
உருவாக்க, பாதுகாக்க
லிப்பிடுகள்
பொங்கிப் பெருகும் சக்திக்கே
கார்போஹைடிரேட்
சக்தி மிகுந்த உடல் வலிமைக்கே
கால்ஷியம்
ஆரோக்கியமான பற்கள்,
எலும்புகளுக்கு
பாஸ்பரஸ்
உடல் சுரப்பிகள், பற்கள் எலும்புகளுக்கு
சோடியம்
இரத்தம் நன்முறையில் செயலாற்ற
குளோரைடு (Cl வடிவில்)
தசை இயக்கத்திற்கு,
பிடிப்புகளைத் தவிர்க்கும்.
பொட்டாஷியம்
மனத் தளர்ச்சி,
தசை அயர்ச்சிக்கெதிராகப் போராட
இரும்புச் சத்து
ஆரோக்கியமான ரத்தத்திற்கே
அயோடின்
தைராய்டு சுரப்பி தரமாக இயங்க
வைட்டமின் ஏ
ஆரோக்கியமான
கண்களுக்கு
வைட்டமின் பி1
வளர்ச்சி,
உறுதியான
நரம்புகள்,
'பெரி-பெரி' நோய்
பிடிக்காதிருக்க



ரிபோஃப்ளேவின்
ஆரோக்கியமான வாய்,
நாக்கு, உதடுகள், கண்களுக்கு
நிகோடினமைடு
ஒளிவீசும் ஆரோக்கியமான
சருமத்திற்கே
கால்ஷியம் பென்டோதெனேட்
நரம்புகளையும் தசைகளையும்
வலுப்படுத்த
கோலின்
கல்லீரல் ஆரோக்கியமாக இயங்க
பைரிடாக்ஸின் (B6)
தசைகளை இளைப்பாற்ற
வைட்டமின் பி12
இரத்த சோகை பீடிக்காதிருக்க
ஃபாலிக் அமிலம்
புதிய இரத்த செல்களை உருவாக்க
வைட்டமின் ஸி
நோயெதிர்ப்புச் சக்தியைப் பெருக்கி,
ஸ்கர்வி நோய் வராதிருக்க
வைட்டமின் டி
உறுதியான பற்கள்,
எலும்புகளுக்கு
வைட்டமின் ஈ
கரு வளர்ச்சிக்கு
வைட்டமின் கே
இரத்தம் இயற்கையான
முறையில் உறைய உதவும்
இதர சிறு சிறு பொருட்கள்
வைட்டமின்களை உடல்
உறிஞ்சிக்கொள்ளவும்,
சுரப்பிகள் நன்கு இயங்கவும்
உதவும்.

காம்ப்ளான் வளரும் குழந்தைகள்,
சுறுசுறுப்பான இல்லத்தரசிகள்,
பரபரப்புடன் இயங்கும் அலுவலாளர்கள்,
கருத்தரித்த தாய்மார்கள், பாலூட்டும் அன்னையர்,
வயது முதிர்ந்தோர், பிணியாறுவோர்
முதலியவர்களுக்கு சாலச் சிறந்தது.

**பால்
சேர்க்கா
மலேயே
பருகலாம்!**




## பாலையும் விட இன்னும் அதிகமான வைட்டமின்கள், புரதம், கால்ஷியம், இரும்புச் சத்து மற்றும் இதர ஊட்டச் சத்துக்களை காம்ப்ளான் அளிக்கிறது.

ஒப்பிட்டுப் பாருங்கள்:
ஒரு கோப்பை காம்ப்ளான் (33 கிராம்),
ஒரு கிளாஸ் பால் (200 மி.லி.)

உலகெங்கும்
உபயோகிக்கப்
படுவது—
**க்ளாக்ஸோ**
ஆராய்ச்சியில்
உருவானது.

# உணர்ச்சி பேதம்

''மாமி! ஜெயாவுக்கு நேற்று ரொம்பத் தலைவலி. படுத்துக் கொண்டிருந்தாள். 'அம்மாவுக்குச் சொல்லி அனுப்பேன்'னு சொன்னேன். அவள் ஒப்பவில்லை. இன்று ஜலதோஷம். கைக் குழந்தைக்கு வயிற்றுப் போக்கு. நீங்க இப்ப என்னோடு வரேளா, அவளைப் பார்த்து விட்டு வரலாம்'' என்று லலிதா கேட்டாள். லலிதா, ஜெயாவின் வீட்டுக்கு எதிர் வீட்டில் குடியிருந்தாள்.

சங்கரி கணவரை நோக்கினாள். உடனே ஓடிச் சென்று மகளைப் பார்க்க வேண்டுமென்ற ஆதங்கம்.

''லலிதா! நானே சாயங்கலாம் சங்கரியை அழைச்சுண்டு வரேனே, இந்த வெய்யிலில் வேண்டாம்'' என்று வேணு கூறிவிடவே, லலிதா விடை பெற்றுச் சென்று விட்டாள்.

''ஜலதோஷத்தோடு ஒரு பெண் கஷ்டப்படறது. கைக் குழந்தைக்கு உடம்பு சரியில்லை. இந்த நிலையிலே வெய்யிலைப் பார்த்துண்டிருப்பாளாக்கும்!'' சங்கரி முணுமுணுக்க ஆரம்பித்தாள்.

''சங்கரி! உனக்கு எத்தனை சொன்னாலும் புத்தியில் ஏறாது. நாம தனியே பிரிஞ்சு வந்தப்போ உங்கிட்டே என்ன சொன்னேன்?''

''ஆமாம், சொன்னேள், சொரைக்காய்க்கு உப்பில்லேன்னு. நீங்க தான் வேலையிலிருந்து ரிடையராயாச்சு. உழைக்க மாட்டேள். நான்...''

''என் நிலையிலேதான் உன்னையும் நிறுத்தி வெச்சுப் பார்க்கறேன். நாங்க்ள் ஆண்கள், ரிடையராகி ஓய்வு எடுக்கிறோம். ஒரு குறிப்பிட்ட வயதுக்கு மேலே ஓய்வு அவசியம்தான் — ரிடையர்மெண்ட். ஆனால் நீ ஆபீசில் வேலை செய்யலை. ரிடையர்மெண்ட் கிடையாது என்பதற்காக எப்போதுமே இந்தக் குடும்பத்துக்காக உழைச்சிண்டிருக்கணுமா? உனக்கு ஓய்வு அவசியமில்லையா? அதுக்குத்தான் குடும்பத்தைப் பிரிச்சேன்.''

''எனக்கு மனசு கேக்கலே. பிள்ளை மாட்டுப் பெண், பேரக்குழந்தைகள் ஒருத்தரும் இல்லாம இப்படித் தனியா இருக்கிறது பாந்தமா இருக்கா?''

''நானும் நீயும் குழந்தைகளுக்குக் குறை வைக்காமல் நம்ப கடமையைச் செய்தாச்சு. இனிமே அவாளுக்காக நானோ நீயோ உழைக்க வேண்டாம். சொல்லப் போனா அவா நம்மை உட்கார வைத்துச் செய்யணும். புரிஞ்சுதா? தனியா பிரிஞ்சு வந்த காரணத்தை இதோடு ஆயிரம் தடவை உனக்குச் சொல்லியாச்சு. பிரிஞ்சு வந்தப்புறமும் பிள்ளைக்கு, பெண்ணுக்குச் செய்யணும்னு ஓடிண்டிருக்காதே.''

சங்கரி தலைப்பை விரித்து ஒரு பக்கம் படுத்துக் கொண்டாள். அந்த நேரத்துக்குக் கணவர் கூறியது சரியாகவே பட்டது.

மாலையில் வேணு வெளியே சென்று விட்டுத் திரும்பியபோது, ஜெயாவின் குழந்தை அவர் வீட்டில் விளையாடிக் கொண்டிருப்பதைக் கண்டார். குழந்தை அவரிடம் ஓடி வந்தது. அவரும் தூக்கிக் கொண்டார்.

''ஜெயா வந்திருக்காளா? எங்கே இப்போ?'' வேணு நான்கு புறமும் பார்வையை ஓட்டியபடியே கேட்-



டார். பெண்களும் பிள்ளைகளும் அவர்களை வந்து பார்ப்பதை அவர் தடுத்ததில்லே.

''ஜெயா வரலே. நீங்க வெளியே போனதும் நான்தான் போனேன். சாயங்காலம் வரேம்னு லலிதாகிட்டே நீங்களே சொன்னேளே. நீங்க மறந்துட்டேளேன்னு நான் மட்டும் போனேன்.''

வேணுபல்லேக்கடித்தபடி அமர்ந்திருந்தார்.

இரண்டு நாட்கள் கழித்துத்தான் ஜெயா வந்தாள். வேணு ஒளிவு மறைவு இல்லாமல் கேட்டு விட்டார். ''ஏம்மா ஜெயா, உன் அம்மாவுக்கு ஓய்வே வேண்டாமா? குடும்பத்துக்காக இத்தனே காலம் உழைத்தது போதாதா? குழந்தையை அவள் தலேயில் கட்டி விட்டாயே?''

''ஏதாவது பேசாதீங்கோ...'' சங்கரி ஆரம்பித்த போது ஜெயா இடைமறித்தாள்.

''நான் ரொம்பத் தடுத்தேன் அப்பா. அம்மாதான் பிடிவாதமா குழந்தையை எடுத்துண்டு வந்துட்டாள். குழந்தை இல்லாமல் எனக்கும் கஷ்டமாத்தான் இருந்தது.''

ஜெயா, குழந்தையுடன் சென்று விட்டாள்.

''நன்னுயிருக்கு நீங்க கேட்டது. பேரக் குழந்தைக்குச் செய்யறது நமக்குப் பாரமா? ஜெயாவுக்கு மனசலே குத்தியிருக்கும்.'' சங்கரி கோபித்துக் கொண்டாள்.

''எனக்கும்தான் அவள் பதில் குத்துகிறது. குழந்தை இல்லாமல் அவளால் இருக்க முடியலேயாம். நீதான் தூக்கிண்டு வந்துட்டியாம். 'அம்மா, அப்பா! நீங்க ரெண்டு நாட்களாவது என்னிடம் வந்து இருங்கள். உட்கார வைத்துச் சோறு போடுகிறேன்'னு சொன்ஞளா?'' வேணு படபடத்தார்.

சங்கரி சுவரில் சாய்ந்து அமர்ந்து விட்டாள். கணவர் சொன்னது அந்த நேரத்துக்கு அவளுக்குச் சரியாகவே பட்டது.

ஹேமா டில்லியிலிருந்து கடிதம் போட்டிருந்தாள். குழந்தைகளுக்கு லீவாம். தாத்தா பாட்டியுடன் இருக்க ஆசைப்படுகிருர்களாம். அதனல் சென்னேக்கு வரப் போகிருளாம்.

''இதோ பார், இவளுடைய எண்ணம் எனக்குத் தெரியும். நம்மைப் பார்க்கவோ நம்முடன் இருக்கவோ இவளுடைய விருப்பம் என்பதெல்லாம் மேல் பசப்பு. குழந்தைகளே நம் தலேயில் கட்டிவிட்டு இங்கிருந்து கணவனுடன் அவள் உல்லாசப் பயணம் போவாள்'' என்ருர் வேணு.

''சிறிசுகள்தானே. உல்லாசப் பயணம் போறதுலே என்ன தப்பு?'' என்பது சங்கரியின் கேள்வி. ''இப்ப நம்ப போக முடியறதா?''

''உன் மடத் தனத்தைத் திருப்பிக் காட்ட ஆரம்பிச்சுட்டியா? உனக்கு ஓய்வு கொடுக்கணும், முடிந்தால் நாலு இடங்களுக்கு அழைச்சுண்டு போகணும்னு பாக்கறேன். நான் இட்டம் போடறத்துக்குள் நீதான் பெண், பிள்ளே, உறவுக்காரா வீடுன்னு உழைக்க ஓடறே...''

''எதுக்கு இப்படி எரிஞ்சு விழறேள். ஹேமா நம்ப பெண்தானே. நம்பளேப்

## எஸ்.ரங்கநாயகி





## மதுரை சிருங்கேரி மடத் திருப்பணி

மதுரை ஸ்ரீ மீனாட்சி தேவியின் சந்நிதியில் இருக்கும் ஸ்ரீ சிருங்கேரி சாரதா பீடத்தைச் சேர்ந்த பழைமையான மடம் திருமலை நாயக்கர் காலத்தில் மன்னரின் ஆதரவுடன் கட்டப்பட்டதாகும். இந்த மடத்தில் ஸ்ரீ விசுவேசுவரருக்கு ஓர் ஆலயமும் இருக்கிறது. இதனைப் புனர் நிர்மாணம் செய்ய வேண்டும் என்று சிஷ்ய மகாஜனங்கள் விஞ்ஞாபித்துக் கொண்டதற்கிணங்க ஸ்ரீ சிருங்கேரி மகா சந்நிதானம் அவர்கள் ஸ்ரீமுகம் வழங்கி குருபக்த சிரோமணி ஸ்ரீ வி. வைத்திய சுப்ரமணிய அய்யரைத் தலைவராகக் கொண்ட ஒரு கமிட்டியை நியமித்துள்ளார்கள். தொன்மை வாய்ந்த இந்த மடத்தின் புனர் நிர்மாணத்துக்கு ரூ. நான்கு லட்சம் வரை செலவு ஆகும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. பொருள் உதவி செய்ய விரும்பும் பக்த ஜனங்கள்:

மதுரை சிருங்கேரி மடப் புனர் நிர்மாண ஸமிதி, 45, வடக்கு வெளித் தெரு, மதுரை-1 என்ற முகவரியோடு தொடர்பு கொள்ளவும்.

---

பார்க்க ஆசைப்பட்டுண்டு வரா. உங்களுக்கு அவளைப் பாக்கணும்னு ஆசை இல்லையா?''

''பேஷா இருக்கு. அவள் வரட்டும். ஆனால் அவ குடும்பத்துக்காக நீயோ நானோ இனியும் உழைக்கக் கூடாது. அவள் வந்து உன்னை உட்கார வெச்சுச் செய்யட்டும்.''

ஹேமாவின் குடும்பம் வந்து விட்டது. வேணு மெள்ள அவளிடம் கூறினார்: ''ஹேமா, நீ வந்தது நல்லதாப் போச்சு. உன் அம்மாவுக்கு ரொம்பத் தள்ளாமை. அவளை உட்கார வெச்சு ஓய்வு கொடுத்துச் செய்துட்டுப் போ.''

''ஓ, பேஷா செய்யறேனே.''

காலையிலிருந்து மாலைவரை சிநேகிதர்கள், உறவுக்காரர்கள் எனஹேமாவின் குடும்பம்பல இடங்களுக்குச் சென்று வந்தது. சங்கரியோ வேளை தவறாமல் அவர்களுக்குச் சமைத்து வைத்து, இரவு நேரம் கழித்துத் திரும்பினாலும் அன்புடன் சாதம் பரிமாறினாள். டில்லிக்காரி, கருவடாம் இலை வடாம் போட முடியாதே என்று தயாரித்துக் கொடுத்தாள்.

''என்னம்மா இது, நான் வந்து சமைக்க மாட்டேனா? வடாமெல்லாம் கடையில் வாங்கிக் கொள்கிறோமே!'' ஹேமா உபசாரமாகக் கூறினாள்.

''நான் இருக்கிறப்போ நீ எதுக்குத் திண்டாடணும்? டில்லியில் நீதானே செய்துக்கறே?'' சங்கரியின் பதில்.

கடைசியில் ஒருவாரம் ஹேமாவும் அவள் கணவனும் கன்யாகுமரி திருவனந்தபுரம் என்று சென்று விட்டு வந்தனர். சங்கரியின் பொறுப்பில் குழந்தைகள் இருந்தனர்.

ஹேமா டில்லிக்குக் கிளம்பிச் சென்றதும் வேணு பல்லை நறநறவென்று கடித்தபடி சங்கரியைக் கோபித்துக் கொண்டார்.

''குழந்தைகளை உன்னிடம் தள்ளிவிட்டு ஊரெல்லாம் சுத்தினாளே, க்ஷேத்திராடனம் போறோம், நீங்களும் எங்களுடன் வாருங்கள். இல்லாட்டா டில்லிக்கு வாங்கோ, ரிஷிகேசம், பத்ரிக்குப் போகலாம்னு உன் பெண் கூப்பிட்டாளா? டில்லியெல்லாம் உங்களுக்குச் சரிப்படாதுன்னு நாசுக்கா சொல்லிட்டா, நீயும் தலையாட்டறே. ஆயுள் முழுவதும் அவாளுக்காக நீதான் உழைக்கணும். அவா உனக்குச் செய்யணுங்கற கடமையே இல்லையா?''

சங்கரி பூஜை அறைக்குள் சென்று விளக்கு ஏற்றினாள். அந்த நேரத்துக்குக் கணவர் கூறியது அவளுக்கும் சரியாகவே பட்டது.

வேணு கோபித்துக் கொண்டு இரண்டு நாட்கள் அவளுடன் பேசாமல் இருந்தார். சங்கரியோ எல்லாவற்றையும் பொறுமையுடன் ஏற்றாள். மூன்றாம் நாள் அவளுக்குத் திடீரென தலைவலி ஜுரம். மறுநாள் டாக்டர் வந்தார். அவளை ஆஸ்பத்திரியில் சேர்க்க ஏற்பாடு செய்யுமுன் சங்கரி கணவரின் மடியில் உயிரை நீத்து விட்டாள். மூளையில் ரத்த நாள வெடிப்பு.

சங்கரி போய்விட்டதும் வேணுவைத் தங்களுடன் வந்து இருக்கும்படி பிள்ளைகளும் பெண்களும் கூப்பிட்டனர். அவர் அசையவில்லை. சங்கரி இல்லாமல் அவர் மனம் சொல்லொணாத வேதனையில் ஆழ்ந்

---

### ஜனநாயகச் சின்னங்கள்!

இந்திய ஜனநாயகத்தின் மதிப்பு மிக்க மூன்று சின்னங்கள்: ஒலிபெருக்கி, பூமாலை, சோடா.

(கண்ணதாசன்) - சரஸ்வதி பதுக









எந்த கால நிலைக்கும்
எல்லா வயதினருக்கும்
ஏற்ற மருந்து




ஆறுமுகம் முத்திரை உள்ள

# ஆர்.எஸ்.பதி மருந்து

தலைவலி, ஜலதோஷம்,
ப்ளு, கை கால் வலி
முதலியவைகளுக்கு
உபயோகிக்கக்கூடியது.

தயாரிப்பவர்கள்:

ஆர்.எஸ்.பதி & கோ,
214, 215. மேலமாசிவீதி, மதுரை-1.
தபால்பெட்டி எண்: 99.

RAJAN

உங்கள் காப்பியை
இனிமையாக்க
இதோ ஓர் வழி
ரிக்கரி இன்ஸ்டன்ட்
கேட்டு வாங்குங்கள்







ஒரு சந்திரிகா (மீடியம்) சோப்பு

# இலவசம்




ஒவ்வொரு
50 கிராம்
ரிக்கரி
இன்ஸ்டன்டுடன்




ரிக்கரி உங்கள்
வீட்டுச் செலவைக்
குறைக்கிறது.

ரிக்கரி®
இன்ஸ்டன்ட்

-விசேஷச் சுவை கொண்ட ஸ்பெஷல் காபி

HRCM-10-74 TAM

தது. லலிதா வந்தாள். ''மாமா! மாமி நம்மை விட்டுப் பிரிஞ்ச போது ஊரிலில்லாமல் போய் விட்டேன். என்னால் தாங்கிக் கொள்ளவே முடியவில்லே. ஒருமுறை நான் ஜுரமாகப் படுத்த போது அன்புடன் கவனிச்சுண்டார். இனிமே எங்களுக்கு யார் மாமா செய்வா!'' என்று விக்கி விக்கி அழுதாள்.

வேணுவின் கண்களிலும் நீர் முட்டியது. ''கடமையைச் செய்துட்டே. இனிமே நீ ஓய்வு எடுக்கணும்னு சொல்லி அவளுக்காகத்தான் பிரிஞ்சு வந்தேன். கேக்கலேயே. ஓய்வில்லாமல் உழைச்சாள். கடைசியில் மரணம்தான் தனக்கு ஓய்வுன்னு போயிட்டாள். உழைச்சு தேய்ந்துட்டாள்.''

''மாமா! நீங்க நினைக்கிறது தவறு. மாமி உண்மையில் மனத்தளவில் ஓய்வு அனுபவித்தவர். எல்லோருக்கும் செய்திருக்காட்டா, ஒருத்தருக்கும் செய்யலேயேன்னு மனம் அலேபாய்ஞ்சு மனசுக்கு ஓய்வு இல்லாமல் போயிருக்கும். எல்லோருக்கும் உதவுவதைக் 'கடமை' என்கிற கண்ணோட்டத்திலே நீங்க பார்த்தேள். மாமியோ 'அன்பு'ங்கற கண்ணோட்டத்திலேயே கண்டாள். 'கடமை' உடலுக்கு ஓய்வு தேடும். 'அன்பு' மனசுக்கு அமைதி தேடும். இந்த இரு உணர்ச்சிகளுக்கும் பேதம் உண்டு. வீட்டு மாடியிலே டாங்க் கட்டி நீர் நிரப்பினால் அந்த நீர் கடமைங்கிற உணர்ச்சியிலே நம் தாகத்தைத் தணிச்சுட்டு, வற்றி விடும். அன்பு உணர்ச்சி என்னும் ஊற்று கிணற்றைப் போல. அது எல்லேக்கோட்டை வருக்காமல் சுரந்துண்டே இருக்கும். மாமி கிணற்று நீர் போன்றவர். இப்பவும் மாமியின் உருவம், அம்பிகையின் உருவமாகத்தான் என் கண் முன்னே நிற்கிறது.''

வேணுவின் மனத்தில் பளிச்சென ஏதோ தெரிந்தது. உணர்ச்சிகளுக்கான மதிப்பும் பேதமும் அப்பட்டமாகப் புரிந்தது.

ராமகிருஷ்ண மடத்தில் காலேப் பிரார்த்தனே நேரம். புதியவர் ஒருவரின் வருகை. வேணு என்ற தம் பெயரை 'ஆனந்தர்' என மாற்றிக் கொள்ளும் கோலம். இனி அவர் ஓய்வு என்ற சொல்லே மறந்து ஜன சேவையில் ஈடுபடுவார்.

'ஓம், ஓம்'—பிரார்த்தனேக் கூடத்தில் மணி ஓசை கேட்கிறது!





**துன்பம் தாங்கும் இதயம்!**

பெரும்பான்மையோருக்குத் தங்களுடைய துயரங்களேப் பொறுத்துக்கொள்ள முடிகிறது. ஆனால் மற்றவர்களின் இன்பத்தைத்தான் பொறுத்துக் கொள்ள முடிவதில்லே.

— (வில்லியம்ஸ் பால்ஸ்) — சரஸ்வதி பஞ்சு

# அதிசயமாய் மாறிய அலட்சியம்!



ஓர் ஆண் மகனின் நடனம் என்றதும் சற்று அசுவாரசியத்துடன் அரங்கினுள் நுழைந்த எனக்குச் செல்வன் சிவசங்கரனின் ஜதிஸ்வர நடனத்தைப் பார்த்ததுமே உற்சாகம் பிடிபடவில்லே. என்றாலும் நிகழ்ச்சியில் சிறப்பான அம்சம் நவரஸ நடனம்தான். ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியின் பிரபாவத்தை வர்ணிப்பது. திருமணக் காட்சியில் சிருங்காரம் தொடங்கி ராவணனே வதைத்த சந்தர்ப்பத்தில் ரௌத்ரம்வரை இராமாயணக் காட்சிகள் மூலமாகவே செல்வன் சிவசங்கர் நவரஸங்களேயும் அதியற்புதமாக வெளிப்படுத்தினான்.

பெண்மையின் நளினமும், ஆண்மையின் கம்பீரமும் அவன் முக பாவங்களின் மூலம் அநாயாசமாக வெளிப்பட்டன. மூன்று ஆண்டுகள் பயிற்சி பெற்ற பின் செல்வன் சிவசங்கரின் நடன அரங்கேற்றம் சுச்சிதமாக நடைபெற்றது.

நடராஜ் — சகுந்தலாவின் மாணவரான சிவசங்கரின் நடன நிகழ்ச்சியில் புதுமையான மற்றோர் அம்சம் குருதட்சிணே என்ற ஏகலேவன் கதை. அடுத்து ''வருகலாமோ'' என்ற நந்தன் சரித்திரக் கீர்த்தனேக்குப் பிடிக்கப்பட்ட அபிநயம் பக்தி நிலேயின் உச்ச கட்டமாக விளங்கியது. சிவசங்கர் நந்தனுகவே மாறி, பக்திக்கு இலக்கணம் வகுத்தான்.

சிவசங்கர் ஸ்ரீ பார்த்தசாரதி சுவாமி சபாவில் அவையோரின் பாராட்டைக் குறைவின்றிப் பெற்ருன். அமைச்சர் அன்பழகனும், ம. பொ. சி.யும் மனமார வாழ்த்தினர். இதோடு விமர்சகளின் பாராட்டும் சேர்ந்துகொள்கிறது!

— காந்தன்

# பாருங்கள் எப்படி ப்யூரிடாஸ் ஃபில்ட்டர்கள் சாதாரணக் குழாய் நீரை வடிகட்டி அசுத்தங்களை நீக்கி நூற்றுக்கு நூறு தீங்கற்ற நல்ல குடி நீராக ஆக்கிவிடுகிறது

நீர்வழிப் பரவும் நோய்களான காலரா, டைஃபாயிடு, சீத பேதி, இரைப்பை-குடல் அழற்சி முதலியவற்றைத் தடுத்துக் காக்க இதைவிட மேலான உத்தரவாதம் எதுவுமில்லை.

1. மேற்புற அறைக்குள் ஊற்றப்படுகிறது குழாய் நீர்.
2. ஆய்வுக் கூடத்தில் பரிசோதனை பெற்ற கேண்டல் ஃபில்ட்டர் எல்லாக் கிருமிகளையும் நீரிலிருந்து வடிகட்டி ஒதுக்கிவிடுகிறது.
3. இணைப்புத் தடமற்ற, இரசாயனப் பொருள்களை எதிர்க்கும் தன்மையுள்ள, கீறல் விழ முடியாத எபாக்ஸி-பூசப் பெற்ற அலுமினியம் அறை.
4. கீழ்ப்புற அறையினுள் நூற்றுக்கு நூறு தூய நீர் குடிக்கத் தயாராகத் திரண்டிடும்.

உங்கள் ஆதரவுக்குரியவர்களுக்கு ஆதரவளியுங்கள். இன்றே பெறுவீர் ஒரு ப்யூரிடாஸ்.

அசல் ப்யூரிடாஸ் ஃபில்ட்டர்களையே வாங்குகிறீர்கள் என்பதை உறுதி செய்ய மேற்புற அறைக்கு மேலுள்ள ப்யூரிடாஸ் முத்திரையைப் பார்த்து வாங்குங்கள். ப்யூரிடாஸ் பெயரும் பதிவு எண் 196501ம் அடிப்புற உலோகத்தின் மீது இருப்பதையும் கவனியுங்கள்.

ப்யூரிடாஸ் இலேசானது, உடையவே உடையாது, தூக்கிச் செல்ல வாகானது, துப்புரவாக்க இலகுவானது.



இலவசக் கைப் புத்தகத்திற்கு எழுதுக:

**பல்சாரா**
நலமான வாழ்க்கைக்கு நவீனமான வசதிகள்

BALBARA · பல்சாரா & கம்பெனி (பிரை.) லிட்.
43, நகின்தாஸ் மாஸ்டர் ரோடு, பம்பாய் 400 001.

CHAITRA-BLS19 TAM Rev.

சுஜாதாவின் நடிப்பு இப்படத்தின் உயிர்த் துடிப்பு. கல்லூரி மாணவியாயிருக்கும்போதே ஓர் ஆண்மகனிடம் மயங்கித் தாய்மையை அடையும் விபரீத நிலைக்கு ஆளாகி, ஒரு நல்ல லேடி டாக்டரின் உதவியால் அதிலிருந்து தப்பி, விதிவசத்தினுல் அந்த லேடி டாக்டரின் சகோதரனையே மணக்கும் அதிர்ச்சிக்கும், அதிர்ஷ்டத்துக்கும் உள்ளாகிக் கடைசிவரையில் கணவனிடம் உண்மையைச் சொல்ல முடியாமல் துடித்து, ஒரு பிளாக் மெயிலரிடம் வசமாகச் சிக்கிக்கொண்டு தவிக்கிறவரையில் சுஜாதா படம் முழுவதும் ஆட்சி செலுத்துகிருர். — இந்த ஒரு வாக்கியமே இந்த விமர்சனம் முழுவதும் ஆட்சி செலுத்த முயல்வது போல!

இப்படத்தின் சுவையான ஓட்டத்துக்கு முழுப் பொறுப்பையும் ஏற்றிருப்பவர் இளம் டைரக்டர் எஸ். பி. முத்துராமன். முத்தான டைரக்‌ஷன்தான்.

கதாநாயகனுக வரும் முத்துராமன் அந்தப் பெருந்தன்மையான பாத்திரத்துக்கு ஏற்றவராக விளங்குகிருர். கதாசிரியர், வசன கர்த்தா பஞ்சு அருணாசலத்துக்கும் படத்தின் பெருமையில் பெரும் பங்கு உண்டு.

முற்பகுதியில் திரைக் கதையின் சஸ்பென்ஸ் நன்ருயிருக்கிறது. பிற்பகுதியில் தேங்காய் சீனிவாசனின் 'பிளாக் மெயில்' நடிப்பு எவ்வளவுதான் சுவையாயிருந்தாலும் சற்று அதிகமாகவே போய் விடுவதால் அலுப்புத்தட்டுகிறது. கள்ளம் கபடில்லாத கல்லூரி மாணவியைக் . களங்கப்படுத்திய கயவனுக வரும் விஜயகுமார் முதலில் சாதாரணமாயிருந்தவர் பிற்பகுதியில் அருமையாக, உணர்ச்சி பொங்க நடித்திருக்கிருர்.

பாபுவின் ஒளிப் பதிவு படத்தின் தரத்தை உயர்த்தியிருக்கிறது.

''ஒருபுறம் வேடன் மறுபுறம் நாகம்'' என்ற கண்ணதாசனின் பாடல் வாணி ஜெயராமின் தேன் குரலில் ஒலித்துப் பரவசப் படுத்துகிறது.

''மயங்குகிருள் ஒரு மாது'' — படத்தின் தலைப்பே சொக்க வைக்கிறது. திரைப்பட சம்பிரதாயத்துக்கு அஞ்சி, வழுக்கி விழுந்த கதாநாயகியைத் தீர்த்துக்கட்டி விடாமல் வாழ்வளித்த கதாசிரியர் பாராட்டுக்குரியவர்! தமிழ்த் திரையுலகில் இப்போதெல்லாம் துணிச்சலுக்குப் பஞ்சமில்லை. ஆனுல் துணிந்து புனைந்த சித்திரம் என்ற பெயரில் கன்ருவியாகப் பல படங்கள் முடிந்திருக்கின்றன. விஜயபாஸ்கர் பிலிம்ஸாரின் இப்படம் அத்தகைய ஒன்று அல்ல! - காந்தன்

# மயங்குகிருள் ஒரு மாது



# பொன்னியின் புதல்வர்



சுந்தா

## 47. தேசிய எழுத்தாளர்

**சாதனைக்கு வேண்டும் ஒரு சக்தி**
**சக்திக்கு வேண்டும் ஒரு பக்தி**

எவ்வளவோ சக்தி வாய்ந்ததுதான் எழுத்து. ஆயினும் இக்காலத்தில் அதைவிடச் சக்தி வாய்ந்ததாய் உள்ளது சினிமா. படிக்கத் தெரியாதவர்களும், படிக்க வகையில்லாதவர்களும் படிக்கச் சோம்புகிறவர்களும் காணும் சாதனம் இது. ஒருங்கே கண்ணெதிரில் ஓடுவதாலும் செவியில் புகுவதாலும், இதன் செல்வாக்கு அளவிட முடியாதது. இந்தச் சாதனத்தை எப்படிப் பயன்படுத்த வேண்டும் என்று கல்கி விரும்பினார்?

சினிமாவைப் போன்ற அபார சக்தியுள்ள சாதனத்தைக் களிப்பூட்டும் கருவியாக மட்டும் உபயோகப்படுத்துவதில் நாம் பூரணத் திருப்தி அடைய முடியுமா? அடைய முடியாது; அடையவும் கூடாது.

சமூக முன்னேற்றத்துக்கும் தேச முன்னேற்றத்துக்கும் பயன்படக் கூடிய கருத்துள்ள சினிமாப் படங்களும் அவசியம் தேவை. இவற்றைப் ''பிரசார நோக்கங்கள் கொண்ட படங்கள்'' என்று சொல்வதற்கு நாம் தயங்க வேண்டியதில்லை. ருஷியா தேசத்தில் வெளியாகும் எல்லாப் படங்களும் பிரசார நோக்கம் கொண்டவையே. அமெரிக்காவில் வெளியாகும் படங்களில் பாதிக்கு மேல் பிரசார நோக்கம் கொண்டவைதான். அவர்களுடைய தேசமும் அந்தந்தத் தேசத்தின் மக்களும் முன்னேறி உயரும் முறையில் பிரசாரக் கருத்துள்ள படங்களை அந்தந்தத் தேசங்களில் எடுக்கிறார்கள். அதற்காக அவர்கள் வெட்கப்படுவதில்லை.... ருஷியாவையும் அமெரிக்காவையும் நோக்கும்போது நம் பாரத நாடு எவ்வளவோ முன்னேற வேண்டியிருக்கிறது. நம் நாட்டுக்குப் பிரசார நோக்கம் உள்ள படங்கள் அவசியம் வேண்டும். ஆனால் பிரசாரம் என்ற பெயரால் விஷத்தைக் கக்கித் துவேஷத்தை வளர்க்கும் படங்கள் வரக்கூடாது. கருத்துள்ள படங்களில் கலந்த பிரசாரம் தேசத்துக்கும் சமூகத்துக்கும் நன்மை தருவதாய் இருக்க வேண்டும். உழைப்பை உயர்த்தி, ஊக்கத்தை வளர்த்து, மலை போன்ற கஷ்டங்களைக் கண்டும் மனந்தளராத உள் வலிமையை ஊட்டி, சமூக நீதியை நிலைநாட்டும் உயர்ந்த கருத்

தியாகபூமி திரைப்படம் தனிநபர் சத்தியாக்கிரகம் நடந்த சமயத்தில் அரசாங்கத்தின் தடை உத்தரவுக்கு உள்ளாயிற்று. படத்தில் தாயின் மணிக்கொடி ஏந்தி சாத்விகப் போராட்டத்துக்குத் தயாராகிறாள் சாவித்திரி. (ஸ்ரீமதி எஸ். டி. சுப்புலக்ஷ்மி)



பாரத மாந்தர் சுதந்திரம் அடைந்ததால் உண்டான இன்பம், மாந்தருக்குள் ஒரு தெய்வம் மறைந்ததால் உண்டான வேதனை இரண்டும் சேர்ந்த இன்ப வேதனையிலிருந்து எழுந்தது 'அலை ஓசை'. (சந்திரா படம்)





பார்த்திபன் கனவு திரைப்படத்தில் ஒரு காட்சி.
படம் உதவி: பிலிம் நியூஸ் ஆனந்தன்

துக்கள் அடங்கிய படங்கள் இந்தியாவின் இப்போதைய நிலைமையில் இன்றியமையாதவை.

(கல்கி இதழ் 6-4-'52)

''கலையிலே பிரசார நோக்கம்'' என்பது பற்றிக் கல்கியின் கருத்து என்ன என்பதை இது தெளிவுபடுத்துகிறது. கதை இல்லாமல் சினிமா இல்லையாதலால், இந்தக் கருத்து கதைக்கும் பொருந்துவதே.

நாடு சுதந்திரம் அடைந்து ஐந்து ஆண்டுகள் ஆன பிறகு வெளியான கருத்து இது. சுதந்திரத்துக்கு எட்டு ஆண்டுகளுக்கு முன்னரே, பிரசாரம் பொதிந்த நாவல் ஒன்றைக் கல்கி எழுதினர். அது சினிமாப் படமாகவும் வந்தது. அதுதான் ''தியாகபூமி''.

அந்த நாவலின் முதற் பதிப்புக்கான முன்னுரையில் டாக்டர் சுப்பராயன் சொல்லியுள்ளது போல், ''நம் நாட்டில் பெண்களின் சுதந்திரம் இப்போது எப்படிக் குறுகிப் போயிருக்கிறது, அதை எவ்விதத்தில் விரிவடையும்படி செய்யலாம் என்பதே இக்கதையின் முக்கிய இலட்சியம்.'' இத்துடன் தீண்டாமைப் பிரச்னை பற்றிய பிரசாரமும் இதில் அடங்கியிருக்கிறது. சமூகப் பிரச்னைகளான இவைகளைப் பொதிந்து நாவல் எழுதவோ படம் எடுக்கவோ துணிச்சல் வேண்டியதில்லைதான். ஆனல், சுதந்திர வேட்கையைத் தூண்டிவிடும் வகையில் துணிச்சலுடன் சேர்ந்த காட்சிகளும் நிகழ்ச்சிகளும் அதில் உண்டு: ''தாயின் மணிக்கொடி பாரீர்'' என்று பாடிக்கொண்டு ஒரு தேசிய பஜனைக் கோஷ்டி செல்வது, சம்பு சாஸ்திரி, பேத்தி சாருவுடன் ஊர் ஊராய்ச் சென்று தேசியப் பிரசாரம் செய்வது, சாவித்திரியும் அவளுடைய கணவனும் சாத்விகப் போராட்டத்தில் ஈடுபட்டுச் சிறை செல்வது முதலியன. அவற்றுடன், (கல்கி இயற்றி, படத்தில் டி. கே. பட்டம்மாள் பாடிய) ''பந்தம் அகன்று நம் திருநாடு உய்ந்திட வேண்டாமோ'' என்ற பாட்டு வேறு.

''தியாக பூமி'' படம், பின்னர் தனிநபர் சத்தியாக்கிரகம் நடந்த சமயத்தில் அரசாங்கத்தின் தடை உத்தரவுக்கு உள்ளாயிற்று. அதன்







- சிவகாமியின் சபதம், தியாக பூமி ஆகியவற்றுக்கு முன்னுரைகள் வழங்கிப் போற்றிய திரு ப. சுப்பராயன்..
- சென்னை பல்கலைக் கழகத்தில் 'தேசியம் வளர்த்த தமிழ்' என்ற தலைப்பில் கல்கி நினைவு அறக்கட்டளைச் சொற்பொழிவு நிகழ்த்தினர் திரு நிரஞ்சனம்.
- திரு புத்தனேரி சுப்பிரமணியம் நாடகமாக்கி டி. கே. எஸ். 'சகோதரர்கள் அரங்கேற்றிய 'சிவகாமியின் சபத'த்தைப் பாராட்டத் திரு மு. வ. மேடையில் அமர்ந்திருக்கிறர்.

தேசியப் பிரசார வன்மைக்கு அது ஒரு சான்று.

''தியாக பூமி'' நாவலை, ''தேசியம் வளர்த்த தமிழ்'' என்ற நூலில் அதன் ஆசிரியர் கா. திரவியம் நாட்டுப் பற்றை ஊட்டிய சிறப்பான நாடகங்கள், நாவல்களில் ஒன்றாகக் குறிப்பிட்டு, தனி ஓர் அத்தியாயத்தில் அதன் தராதரங்களை ஆராய்ந்திருக்கிறார். சிறை சென்ற தேச பக்தரும், இப்போது தமிழக அரசில் ஐ. ஏ. எஸ். அதிகாரியுமான திரவியம், 1974 தொடக்கத்தில், சென்னைப் பல்கலைக் கழகத்தில் கல்கி நினைவு அறக் கட்டளைச் சொற்பொழிவு நிகழ்த்தினர். அந்தச் சொற்பொழிவு அடங்கிய நூலே இது.

''தியாக பூமிக்கு முன்னும் பின்னும் திரவியம் குறிப்பிட்டுள்ளவை:

1894ல், பண்டிதர் க. கோபாலாச்சார் எழுதிய ''ஆர்ய சபா'' நாடகம்.

சதாவதானம் தெ. பொ. கிருஷ்ணசாமிப் பாவலர் இயற்றி, 1922ல் அரங்கேறிய ''கதரின் வெற்றி'' நாடகம்.

''பாணபுரத்து வீரன்'', ''நவசக்தி''யில் கல்கியின் மூத்த சகாவான வெ. சாமிநாத சர்மா வரைந்து, கல்கி அந்தப் பத்திரிகையில் இருந்த காலத்தில் 1924ல், தொடராய் வெளிவந்த நாடகம். அதே நாடகத்தைத் ''தேச பக்தி'' என்ற பெயருடன் டி. கே. எஸ். சகோதரர்கள் அரங்கேற்றி நடத்தினார்கள்.

எஸ். டி. சுந்தரம் இயற்றிய நாடகம் ''கவிஞன் கனவு''.

கே. எஸ். வெங்கடரமணியின் நாவல் ''தேசபக்தன் கந்தன்''.

அகிலன் எழுதிய, ''கலைமகள்'' பரிசு பெற்ற நாவல், ''பெண்''.

ஆகஸ்டுப் புரட்சி நடந்த ''1942''ம் வருடத்தையே மகுடமாகக் கொண்டு, கு. ராஜவேலு வரைந்த நாவல்.

தேசியம் பொதிந்த சிறு கதைகளைத் திரவியம் குறிப்பிடுகையில், வ.வெ.சு. ஐயரின் ''மங்கையர்க்கரசி''க்கு முன்னோடி என்ற சிறப்பிடம் கொடுத்திருக்கிறார்.

அடுத்தாற்போல் கல்கியின் சிறு கதைகள். அவற்றில் சிறப்பான சில: கணையாழியின் கனவு, பவானி பி.ஏ., பி.எல்., தூக்குத் தண்டனை, அமர வாழ்வு, பொங்குமாங்கடல்.

கல்கியின் இத்தகைய தேசியச் சிறுகதைகள் பற்றித் திரவியத்தின் மொத்த மதிப்பீடாவது:

> கல்கியின் சிறுகதைகள் தேசியத்துக்கு ஆற்றிய சிறப்பான தொண்டு; அக்கதைகள் பெரும்பாலானவற்றில் நாட்டுப் பற்றும் நாட்டுக்கு ஆக்கம் தேடிய நல்ல கருத்துக்களும் கதையில் இழையோடியதாகும். சிறை சென்ற தேச பக்தனைக் கதாநாயகனாகவும், சமூக சேவை ஆற்றும் ஆர்வம் கொண்ட பெண்ணைக் கதாநாயகியாகவும் கொண்டு பின்னப்பட்டிருந்த இக்கதைகள், தியாகிகளையும் ஊழியர்களையும் நம் கண் முன் நிறுத்தி, அவர்கள் தொண்டினாலும் துன்பங்களினாலும் ஊழியத்தினாலும் உள்ளக் கிளர்ச்சிகளாலும் படிப்பவர்களை ஆட்கொண்டன. அரசின் அடக்குமுறைக்கும் பொதுவாகப் பலரின் அலட்சியத்துக்கும் ஆளாகியிருந்த இந்த வீரர்களுக்கும், வீராங்கனைகளுக்கும், தம் கதைகள் மூலம் சமூகத்தின் ஏற்பையும் பாராட்டுதலையும் பெற்றுத் தந்தது, கல்கியின் சிறந்த சாதனைகளில் ஒன்று. (பக். 200)

இதே நூலில் ''படைக்கலன்களாகிய பத்திரிகைகள்'' என்று ஒரு பகுதி.



சென்னை, அறிஞர் அண்ணா அரசாங்க மருத்துவ மனையின் (இந்தியன் மெடிஸன்) ஓய்வுபெற்ற சூப்பரின்டெண்டெண்ட் டாக்டர் T. P. ராஜகோபால் அவர்கள் குமாரன் டாக்டர் ராகவ பாரத்வாஜ்க்கும், சென்னை, பல்லவன் போக்குவரத்துக் கழகம் பொதுஜனத் தொடர்பு அதிகாரி திரு P. D. ராமன் அவர்கள் குமாரத்தி சௌ. ராஜலக்ஷ்மிக்கும் திருமணம் சென்னையில் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்





திண்டுக்கல் சைவப் பெருமக்கள் பேரவை செயலாளரும் பெருவணிகருமான திரு S. G. சம்பந்தம் பிள்ளை அவர்களது புதல்வி செல்வி அபிராமிக்கும்,

திரு S. வைத்தியலிங்கம் பிள்ளை (*Deputy Director (Rtd.) Central Secretariat Service. New Delhi)* அவர்களது புதல்வர் செல்வன் V. வேலாயுதம் B.Sc., (Engg.) *(Sundaram Fasteners, Madras)* அவர்களுக்கும் 5-6-75ல் திண்டுக்கல் நகர் மணமகள் இல்லத்தில் திருமணம் மிகச் சிறப்பாக நடந்தேறியது.

வாழ்க மணமக்கள்

அதிலே தனித் தனி அத்தியாயங்களுக்கு உரிய பத்திரிகாசிரியர்கள், பத்திரிகைகளில் எழுதியவர்கள் ஆகியோரின் பெயர்கள்: பாரதியார், திரு வி. கல்யாணசுந்தரனார், டாக்டர் வரதராஜுலு, வ. ராமசாமி ஐயங்கார், டி. எஸ். சொக்கலிங்கம், கல்கி, ரங்கசாமி அய்யங்கார், டி. எஸ். எஸ். ராஜன்.

தனித் தனி அத்தியாயங்களுக்குரிய பத்திரிகைகள் : ஆனந்த விகடன், சுதேச மித்திரன், சுதந்திரச் சங்கு.

கல்கி பற்றிய அத்தியாயத்திலிருந்து சில வாக்கியங்கள்:

வாழ்வோடு ஒட்டிய வளமான தமிழ் நடையில், தமிழ்ப் பற்றையும், தேசிய உணர்வையும் குழைத்து, அடிமைத்தனத்துக்கு மருந்தாகவும், ஆர்வத்துக்கு விருந்தாகவும் அளித்து, பாமரருக்கும் படித்தோருக்கும் இடையே பலமான பாலமாகப் பத்திரிகையைப் பயன்படுத்துவதில், இத்துறையில் இணையற்ற வெற்றி கண்டவர் கல்கி.

கவிதைத் துறையில் பாரதியார் தோற்றுவித்த திருப்பத்தை உரை நடை இயலில் உண்டாக்கியவர் கல்கி.

அவர் எழுத்தினால் ஏற்பட்ட எழுச்சி, பரதேசி மொழியில் படர்ந்திருந்த மோகத்தை விரட்டி, மேதாவித்தனம் என்ற போர்வையில் பதுங்கியிருந்த மெத்தனத்தை அம்பலப்படுத்தி, துணிந்து செயலாற்றவும் முன்னேற்றப் பாதையில் துரித நடை போடவும் தூண்டியது மக்களை. (பக். 114—118)

நூலின் முகப்பிலுள்ள ''தேசியமும் தமிழும்'' என்ற பொதுக் கட்டுரை, கல்கியின் இலக்கிய வாழ்க்கைக்கும், பணிக்கும் முற்றிலும் பொருந்துவது:

... உரிமை உணர்வு உள்ளத்தில் ஊற்றெடுத்தபோது எழுந்த அரசியல் விழிப்புடன் பந்தமகற்றப் போராடும் வேகத்தை ஒட்டி, சொந்த மொழியில் ஆர்வமும் ஆக்கமும் பெருகின. தேசபக்தி, தாய்மொழிப் பற்றை வளர்க்க, தாய்மொழி ஆர்வம் தேசிய உணர்வுக்குத் துணை நிற்க, விடுதலைப் போராட்ட இயக்கம் இந்திய மொழிகளின் வளத்துக்கும் வலுவுக்கும் வளர்ச்சிக்கும் வழிவகுத்தது. நாட்டின் முன்னேற்றத்துக்குக் காந்தி அடிகள் வகுத்த நிர்மாணத் திட்டத்தில், தாய்மொழித் தொண்டு தலையாய இடம் பெற்றது. 'நாமார்க்கும் குடியல்லோம்'என்று நாவுக்கரசர் எழுப்பிய தமிழ் முழக்கம், ஆன்மீகத் துறையிலிருந்து அரசியல் துறையையும் தழுவி, அச்சமற்ற, ஆண்மை மிக்க, தொண்டர்களையும், தலைவர்களையும் தோற்றுவித்தது. அடிமைத் தளைகளை அகற்றி, அறிவுக்கு ஆக்கம் தேடி, தாழ்வினைப் போக்கி, வாழ்வினை வளமாக்க, தாய்மொழிப் பற்றும், தாய்நாட்டுப் பக்தியும் இணைந்து செயல்பட்டன. தமிழால் தேசியம் தழைத்தது. தேசியத்தால் தமிழ் செழித்தது.

தேசியத்தால் தமிழ் எழுத்தாளராய் உருவாகிய கல்கி, தமது எழுத்தின் மூலம் தேசியமும், தமிழும் ஒருங்கே தழைக்கச் செய்வதை, ஓர் அர்ப்பணப் பணியாகக் கொண்டார். அந்தப் பணி, நவசக்தி நாட்களில் செடியாக வளர்ந்து ஆனந்த விகடன் நாட்களில் தருவாகி, வீசிக் கிளை விட்டு, கல்கிப் பத்திரிகை நாட்களில் பெரியதோர் ஆலாகப் படர்ந்தது.

ஆனந்த விகடனில் கல்கி எழுதிய ''தியாக பூமி'' நாவலில், உப்பு சத்தியாக்கிரகம் மட்டுமே இழையோடியிருந்தது. அதற்கு ஒன்பது ஆண்டுகளுக்குப் பிறகு, சொந்தப் பத்திரிகையில் அவர் எழுதிய ''அலை ஓசை'' நாவலிலோ, விடுதலைப் போராட்ட காலம் முழுவதுமே, பின்புலனாய் அமைந்தது; அந்தப் போராட்டத்தின் தலைவர் காந்தி மகாத்மாவின் பிரிவும் அதன் இறுதிக் கட்டத்தில் சேர்ந்து கொண்டது. பாரத மாந்தர் சுதந்திரம் அடைந்ததால் உண்டான இன்பம்; ''மாந்தருக்குள் ஒரு தெய்வம்'' மறைந்ததால் உண்டான வேதனை— இரண்டும் சேர்ந்த இன்ப வேதனையிலிருந்து எழுந்தது ''அலை ஓசை.''

''தியாகபூமி'' தேசிய வளர்ச்சிக்கு ஓரளவு துணையாயிற்று என்றால், மற்றது வளர்ந்த தேசியத்தின் வரலாற்றை அங்கங்கே காட்சிகளாய்க் காட்டிற்று. அந்த வரலாற்று நிகழ்ச்சிகள் பலவற்றில் மெய்யாலோ, மனத்தாலோ எழுத்தாலோ ஈடுபட்டிருந்தவர் கல்கி. இவ்வித ஈடுபாடு காரணமாய்த்தான் ''அலை ஓசை'' நாவலை — மற்றவர் எப்படி நினைத்தாலும் சரி — தமது மிகச் சிறந்த படைப்பாகக் கல்கி கருதினார். ''ஏறக்குறைய முப்பது ஆண்டுகளாகத் தமிழ்த் தாய்க்குப் பயபக்தியுடன் இயற்றி வந்திருக்கும் பணிகளுக்குள்ளே இதுவே தலைசிறந்தது என்று நம்பித் தமிழ்நாட்டு ரஸிகப் பெருமக்களுக்கு இந்த நூலை அர்ப்பணம் செய்கிறேன்'' என்று அந்த நாவலின் முன்னுரையில் அவர் சொல்லியிருக்கிறார்.

''தியாகபூமி''க்கு அடுத்த நாவலான ''பார்த்திபன் கனவு'' பழந்

---

**பழமொழிகள் சில :**

நான் அடிமையாக இருக்க மாட்டேன் என்பதனால் நான் எஜமானனாகவும் இருக்க மாட்டேன்.

அபிரஹாம் லிங்கன் - விசுவநாதன்

நீங்கள் ஒன்றுமே செய்யாதிருக்கும்போது ஓய்வெடுப்பது கடினம். -ரோம் பழமொழி

நன்றி சொல்ல முதலிலும் புகார் சொல்லக் கடைசியிலும் நிற்பவனே ஒரு 'ஜெண்டில்மேன்'.

செர்பிய பழமொழி-''ராதா''

காலத்தில் நிகழ்ந்ததான சரித்திரக் கதையேயாயினும், அதிலே, பார்த்திப னின் விடுதலை இயக்கத்தை உடன் காலத்தில் பாரத மக்கள் கொண் டிருந்த ஏக்கத்தைப் போல் ஆசிரியர் தொனிக்கச் செய்கிறார்.

இந்த நாவலின் முன்னுரையில் பேரா சிரியர் எஸ். வையாபுரி பிள்ளை, இந்தத் தொனியைக் குறிப்பிட்டுச் சொல்லி இருக்கிறார்:

சோழ நாடு சுதந்திரம் இழந்து, அடிமை வாழ்வு வாழ்கிறது. அதன் சுதந்திர வாழ் வையும், பரத கண்டம் முழுவதிலும் பரந்து நிற்க வேண்டிய அதன் புகழையும் குறித்துப் பார்த்திபன் கனவு கண்டு அக்கனவைச் சித்திரமாக எழுதி, ஏங்கி ஏங்கி நைகிறான். தனது ராணியாகிய அருள்மொழியையும் தன் புதல்வனாகிய விக்கிரமனையும் தன் கனவுல கைக் காணச் செய்கிறான். சுதந்திரத்தை மீட்கும் பொருட்டு, நரசிம்ம பல்லவ சக்கர வர்த்தியோடு வீரப் போர் விளைத்து மடி கிறான்...

நவீனத்தின் முதலிலிருந்து கடைசிவரை தேசப் பற்று என்னும் அடிநாதமே ஒலித்துக் கொண்டிருக்கிறது.

இந்த நாவலைக் கல்கி, தேச பக் தர்கள் நாட்டின் சுதந்திரத்துக்காக ஏங் கிக்கொண்டிருந்த காலத்தில் எழுதினார் —''தியாக பூமி'' நாவலும் படமும் வெளியானதற்குச் சிறிது காலத்துக்குப் பிறகு. இதை ஏன் கல்கி அப்போதே ஆனந்த விகடனில் வெளியிடவில்லை என் பது தெரியவில்லை. ஆனால் அப்படி வெளியிடாதது நல்லதாய்ப் போயிற்று. தமிழிலே வகையான முதலாவது சரித் திர நாவலான அதைத் தமது சொந்தப் பத்திரிகையிலேயே வெளியிடும் பெருமை அவருக்கு வாய்த்தது — 1941 அக் டோபர் 16ந் தேதியிலிருந்து. அது வெளியான அப்போதும் விடுதலை ஏக்கம் தொடர்ந்திருந்தது; உலக யுத்த பயங்கரத்தினிடையே, எது எப்படி யாகுமோ என்ற கவலையினிடையே, இன்னும் அதிகமாகியும் இருந்தது.

ஏங்குவோரை மேலும் ஏங்க வைப் பதாய் இருந்தது ''பார்த்திபன் கனவு''. அதனால் என்ன பயன் என்று கேட்கலாம். முன்பு பாரதியார், ''என்று தணியும் இந்தச் சுதந்திர தாகம்?'' என்று ஏங்கி, ஏக்கம் ஊட்டிப் பாடியதால் என்ன பயனோ அதே பயன் தான். ஏக்கத்திலிருந்து ஆத்திரம் உண்டாகும்; ஆத்திரத்திலிருந்து ஆவே சம் உண்டாகும்.

ஏங்கியும் ஏங்க வைத்தும் சில பாடல் களைப் பாடிய பாரதியார், வேறு பல வற்றில், ''பாரத நாடு பழம்பெரு நாடே, பாடுவம் இஃதை எமக்கில்லை ஈடே'' என்று நாட்டின் புகழை ஓங்கி யும், ஓங்கிடவும் பாடி, அதைக் கேட் போர் யாவரும் தம்முடன் சேர்ந்து பாடிடச் செய்தார். அவர்களைப் பொது வாக, மன்னும் இமய மலையிலிருந்து நீலத் திரைகடலோரம் வரை கூட்டிச் சென்று, வெவ்வேறு பொற்காலங்களில் மாண்புடன் திகழ்ந்த காட்சிகளைக் காட்டினார். பின்னர் குறிப்பாக, நித்தம் தவம் செய் குமரி எல்லையி லிருந்து வட மாலவன் குன்றம்வரை, புகழ் மண்டிக் கிடந்த தமிழ் நாட்டிலே உலவச் செய்தார். வேதம் நிறைந்த தாயும், வீரம் செறிந்ததாயும் விளங்கிய நாட்டிலே வியந்து நடமாடச் செய் தார். கல்வி சிறந்த நாட்டிலே கம்பன் பிறந்த காலத்தைக் காணச் செய்தார். நாட்டுக்கு வான் புகழைத் தேடிக் கொடுத்த வள்ளுவன் தமிழ் மறை ஓதுவதை உடனிருந்து கேட்கச் செய் தார். நெஞ்சை அள்ளும் சிலப்பதி காரம் என்ற மணி ஆரத்தைத் தமி ழன்னைக்கு இளங்கோ அடிகள் அணி வித்ததை மெய் சிலிர்த்துப் பார்க்கச் செய்தார்.



'' மூன்று மாதம் லீவு கேட்கிறாயே! எதற்கு?''
'' தொலைந்து போன என் ரேஷன் கார்டுக்குப் பதில் புது ரேஷன் கார்டு வாங்க வேண்டியிருக்கு!''

பாரதியாரின் அப்பாடல்கள் செய் தது போலவே ஓரளவுக்குச் செய் தது கல்கியின் சிகரப் படைப்பான ''சிவகாமியின் சபதம்.'' முந்திய நாவ லைப் போலவே இதுவும் சுதந்திர தாகம் மிகுந்திருந்த காலத்தில் உருவாகி, அது தணிந்திராத காலத்தில் வெளியானது தான் — கல்கி பத்திரிகையில் இது வெளியாகத் தொடங்கிய தேதி: 1—1—44.

மறுபடியும் இந்த நாவலுக்கும் தாம் வழங்கிய முன்னுரையில் டாக்டர் சுப்பராயன் சொன்னார்:

பல்லவ அரசர்கள் காஞ்சியில் அரசாட்சி நடத்திய காலத்தில் எவ்வாறு தமிழுக்கும் தமிழர்களுக்கும் சேவை செய்து, சிற்பம் சித்திரம் முதலிய கலைகளை வளர்ப்பதில் ஊக்கத்தைக் காட்டி, அக்கலைகளைத் தமிழ் நாடு முழுவதும் பரப்புவதற்குப் பிரயத்தனம் செய்தார்கள் என்பதைச் ''சிவகாமியின் சபதம்'' நன்கு விளக்குகிறது. திருநாவுக்கரசர் காஞ்சியில் பல்லவ அரசனுடைய பக்திக்குரியவராக வாழ்ந்து, சைவ சமயத்துக்குச் செய்த சேவையை இந்தக் கதை சரித்திர பூர்வமாக எடுத்துக் காட்டுகிறது. பிற்காலத்தில் சிறுத்தொண்டர் என்று புராணப் பிரசித்தி பெற்ற பரஞ்சோதி, இளம் வயதில் தமிழ் படிப்பதற்காகக் காஞ்சிக்கு வந்து எப்படிப் பல்லவ சேனாதிபதியானார் என்பதையும், வாதாபியை வெற்றிகொள்ள எப்படி அவர் காரணமாக இருந்தார் என்பதையும் இந்தக் கதை ரஸமாகச் சித்திரிக்கிறது. இத்தகைய சரித்திர நிகழ்ச்சிகளை மாத்திரமேயன்றித் தமிழரின் வாழ்க்கைப் பண்பாடு எவ்வளவு உயர்ந்த நிலையில் பல்லவ ஆட்சியின் கீழ் இருந்தது என்பதை, நம் கண் முன்னால் காண்பதைப் போல், இக்கதையைப் படிக்கும்போது தெரிந்து கொள்கிறோம்.

கல்கியின் அடுத்த சரித்திர நாவலான மாபெரும் ''பொன்னியின் செல்வன்'' அவருடைய பத்திரிகையின் இதழ்களில் 1950 அக்டோபர் 29ந் தேதியிலிருந்து மூன்றரை ஆண்டு காலம் தமிழ்ப் புனலாக, கற்பனை வெள்ளமாகப் பெருகி ஓடிற்று. அதிலே கல்கி, பார்த்திபன் கனவு நனவாகி, வீர வெற்றிக் கொடியாகச் சோழர்களின் புலிக் கொடி பறந்ததையும், அந்தக் கொடியின் நிழலிலே சமய வளமும், அதைச் சார்ந்து கலைவளமும் கொழித்ததையும், அந்த வளங்களின் அளாவலும் அடையாளங்களும் நிறைந்த பொன்னி நாட்டில் பிறந்தவர் என்ற பெருமைப் பெருக்குடன் வர்ணித்து எழுதினார்.

பொன்னியின் செல்வன் இராஜ இராஜ சோழனாய்ப் பட்டம் சூடும் வரை, கதையைக் கல்கி கொண்டு போகாமல், அதற்குப் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னால், உரிமையையும் தகுதியையும் அவன் விட்டுக் கொடுத்து, உத்தம சோழனுக்கு மகுடம் அளிக்கும் தியாகச் செயலுடன் நிறுத்திக் கொண்டார். அதன் மூலம் அவர், பிள்ளைப் பருவத்தில் அரவான் கதையைக் கேட்ட நாள் முதல், எல்லாவற்றுக்கும் மேலாகத் தாம் போற்றி வந்த தியாகத்துக்குப் பொன் முடி சூட்டினார்.

முன்பு, பாரத மக்களின் கனவு நனவான ஆனந்த சுதந்திரத் திருநாளன்றும், தியாகத்தையே அவர் பொன்னெனக் கொண்டாடி அதை வாழ்த்தியும் வணங்கியும் எழுதினார்:

பாரத நாடு பூரண சுதந்திரம் பெற்ற இந்தப் புனிதத் திருநாளில், தாயின் சுதந்திரத்துக்காக வாழ்நாளெல்லாம் பாடுபட்டு வானுலகம் எய்திய பெரியோர்களை நினைப்போமாக...

பிரசித்தி பெற்ற தலைவர்களை நினைந்து போற்றிய நாம், பெயரும் புகழும் இல்லாமல், ஜன்ம தேசத்துக்குத் தொண்டு செய்து உயிரையும் அர்ப்பணம் செய்த தேசபக்த வீரத் தியாகிகளையும் நினைப்போம். அவர்களுடைய தொண்டையும் தியாகத்தையும் வாழ்த்திப் போற்றுவோம்.

(கல்கி சுதந்திர மலர் 15-8-'47)

நாட்டின் சுதந்திரத் திருநாளுடன் தேசிய விடுதலை இயக்கம் முற்றுப் பெற்றது. அந்த இயக்கத்தில் ஈடுபட்டோரில் பெரும்பாலோருக்கு அது ஒரு போராட்ட இயக்கமாக மட்டுமே இருந்தது; அவர்களுடைய தேச பக்தி அன்னிய ஆதிக்கத்தைச் சமராடி ஒழிப்பதை மட்டுமே குறியாகக் கொண்டிருந்தது. அவர்களில் எழுத்தாளர்களாயும், பேச்சாளர்களாயும் இருந்தவர்களில் பலரும், தமது எழுத்தையும் பேச்சையும் அந்தக் குறிக்கோளுக்காக மட்டுமே பயன்படுத்தினார்கள். அவர்களில் விதி விலக்காய் இருந்தவர்களில் கல்கியும் ஒருவர். அவருடைய தேசபக்தி இந்தக் குறிக்கோளுக்கு அப்பாலும் விரிந்தது. பாரத நாட்டின் பண்பாடு, அதன் ஒரு பகுதியும் தனித் தன்மை கொண்டதுமான தமிழகப் பண்பாடு, ஆகிய இரண்டின் உள்ளீடான தத்துவங்களிலும் வெளியீடான வண்ணங்களிலும் அவருடைய கவனம் லயித்தது. அவற்றை அவர் அனுபவித்து, அனுபவித்து, தமது அனுபவ ஆனந்தத்தை, நேரான கட்டுரைகள் மூலமும் புனைந்த கதைகள், நாவல்கள் மூலமும், பிறருடன் பகிர்ந்து கொண்டார்.

சுருங்கச் சொன்னால், மிக விரிவானதொரு தேசியத்தால் எழுந்தவை கல்கியின் இலக்கிய சாதனைகள்.

இந்தச் சாதனைகளின் அறிகுறிகளையும், அடையாளங்களையும், அவருடைய பிள்ளைப் பருவம் முதலே காண முடிந்தது என்றாலும், அவருடைய ஆனந்த விகடன் நாட்களிலேதான், அவற்றுக்கு வேண்டிய அனுபவங்களும், தொடர்புகளும், துணைகளும் வகையாக வாய்த்தன. (தொடரும்)

---



**நாடகத்தின் சரித்திரம்!**

''ஆபீஸில் இன்று அரை நாள் லீவு வாங்கி நாடகத்துக்கு வர ஒரு பெரிய நாடகமே ஆடவேண்டியிருந்தது!''

''ஹிஸ்டாரிக்கலா? சோஷியலா?''

- வி. எஸ். கணேசன்


" என்ன! மாம்பழம் ஒன்று ரூ. 1௨-50 ஆ! எங்கே வாங்கினீர்கள்?
" சூப்பர் மார்க்கெட்டில்!
மாம்பழம் விலை ரூ. 6-80
இதற்கு எஸ். டி. ரூ. ௨-40
சர் சார்ஜ் ரூ. 1-70
பாக்கிங் சார்ஜ் ரூ. 1-60
ஆக மொத்தம் ரூ. 1௨-50
தான் ஆச்சு! "


உன் கழுத்துக்கு மாங்காய் மாலை கேட்டியே! மாம்பழ மாலையாகவே வாங்கினேன்!


மாம்பழம் மட்டும்!


எதிர்க்கட்சிகளை நான் தாக்கிப் பேசியதும் மேடையில் மாங் கொட்டைகளை வீசினார்கள். இந்தா! இதையே நீ சூம்பு வச்சுடு.


மாங்காய் ஊறுகாய் பிரமாதம்! எது?
நீங்கள் வாங்கிட்டு வந்த மாம்பழம் தான்!


மாம்பழத்தை உள்ளே வைத்துக் கொண்டை போடாதே! ஈ. பறந்தும் பாடு சகிக்கலே!


மாம்பழ பார்டர் போட்ட மாம்பழக் கலர் புடவை என்ன விலை?
ஜஸ்ட் ரூ. 6000 தான்!

# கட்சி மாறும் பட்சி

கதை: குட்டி கிருஷ்ணன்

படம்: ராஜ்

11



















எனக்கு டகல் பாச்சா வேலை யெல்லாம் கத்துத் தந்த குருநாதர் காட்டேரி முத்து உங்கிட்டே பிச்சை வாங்கணும் நமஹ! சரி, பதினஞ்சாயிரம் ரூபா கொடு; வேலையை முடிச்சுடறேன்.


ரொம்ப அதிகம்! நானே ரேட்டை ஏத்திப்புட்டேன். நீ அதுக்கும் மேலே கோறியே?
எம்மாம் டேஞ்சர் வேலை இது, பேசறியே!...


... உழைச்சுச் சம்பாதிச்ச துட்டையா தரப்போறே?
சரியப்பா! அட்வான்ஸ் பாதி, அப்புறமா பாதி!


அமாவாசை இருட்டு, அருள்தாஸ் சந்து, சரியா ஒண்ணே முக்கால் மணிக்கு நைட் ஷோ முடிஞ்சு நீ வீடு திரும்பறே. நான் உனக்காகக் காத்துக்கிட்டி ருக்கேன், மறந்துடாதே!


நிறையப் பணம் கிடைத்ததும் தலை கால் புரியவில்லை சொக்கப் பனுக்கு. மஜாவாகக் கள்ளச் சரக்கை வாங்கிக் குடித்தான்.
டேய் பட்சி! அமாவாசை இருட்டு, அருள்தாஸ் சந்து சதக், சதக்!


சொக்கப்பன் குடி போதையில் பேசியதைக் கேட்டு விட்டார்கள் பிரிந்த கட்சி அடியாட்கள் இருவர்.
பட்சி ஏதோ சூழ்ச்சி பண்ணு கிறப்பலே தெரியுது. சொக்கப்பன் மிதப்பிலே இருக்கும் போதே அவனிடம் கேட்டுப் புரிஞ்சுக் கிடலாம்.

தொடரும்

# அன்னையம்மா!

- தமிழ் ராஜேஸ்வரி -

மலர்கள் பாய் விரித்தாற்போல் மரங்களின் அடியில் பரந்து விரிந்திருந்ததும் தனி எழிலாகத்தான் இருந்தது. மனிதன் எத்தனை தான் சிந்தித்து ஜோடனை செய்தாலும், இயற்கை அள்ளித் தெளிக்கும் எழிலுக்கு எங்கு இணையாகிறது ?

கால் பட்டு மலர்கள் கசங்கி விடக் கூடாதே என்ற கவலையில் பார்த்து, பார்த்து அடியெடுத்து வைத்து முன்னேறினான் குமார்.

பரந்த அந்தத் தோட்டத்தின் நடுவே கம்பீரமான வெள்ளை கட்டடம். தன் வெள்ளி விழாவைக் கொண்டாடும் குதூகலத்தில் பல வகை தோரணங்களோடு காட்சி அளித்தது.

நேராகக் காரியாலய அறையினுள் நுழைந்தான். எளிமையான ஆனால் தேவைக்கு ஏற்ற வசதிகளுடன் கூடிய அந்த அறையில் நடுவாக அமர்ந்திருந்த மாது பொன் விழாக் கொண்டாடிச் சில வருடங்களாகி இருப்பவர் போல் தோற்றம் அளித்தார்.

''உள்ளே வரலாமா ?'' நாசூக்காகக் கேட்டார் குமார்.

''தாராளமாக.'' முறுவலுடன் வந்தன வார்த்தைகள்.

எதிரில் உள்ள ஆசனத்தைக் காட்டினார் அந்த மாது, குமார் அமர.

அமர்ந்து அவரை நிமிர்ந்து நோக்கியவன், ''ஒரு பெரும் உதவியைத் தங்களிடம் நாடி வந்திருக்கிறேன்'' என்றான்.

'' முடிந்த எதையும் செய்யத் தயக்கமில்லை.''

''சுமார் பன்னிரண்டு வருடங்களுக்கு முன்பு ஆறு அல்லது ஏழு வயதுடைய ஒரு பெண் குழந்தையை அதன் அன்னை இங்கு கொண்டு விட்டாரே, அவள் சௌக்கியமாக இருக்கிறாளா ?''

'' இப்படிச் சொன்னால் எந்தக் குழந்தை என்று நான் நினைக்க முடியும் ?''

''ஐ ஆம் ஸாரி. திருச்சிப் பகுதியிலிருந்து ஓர் ஏழை விதவை கொண்டு வந்துவிட்ட பெண். அந்தக் குழந்தைக்குக்கூடக் கண் தெரியாது !''

'' ஓ ! அவளா? சௌகரியமாக இருக்கிறாளே !''

''அவள் பெயர் மீரா இல்லையா ?''

''ஆமாம். ஆனால் அந்தப் பெயரே அந்தப் பெண்ணுக்குக்கூடத் தெரியாது !''

'' என்னது? பெயர் கூடத் தெரியாதா?''

''பெயர் தெரியும். ஆனால் மீரா என்று தன்னைக் கூப்பிட்டு வந்தார்கள் என்பதே அந்தப் பெண்ணுக்குத் தெரியாது. சில காரணங்களுக்காக, இந்த விடுதியில் சேர்ந்தவுடன் குழந்தைகளின் பெயரை மாற்றி விடுகிறோம். இப்பொழுது அவளுக்கு நாங்கள் கொடுத்த பெயர்தான் தெரியும் !''

''அவளுக்கு நீங்கள் கொடுத்த பெயர் என்ன என்று தெரிந்து கொள்ளலாமா ?''

''மன்னிக்க வேண்டும். அதெல்லாம் சொல்வதற்கில்லை !''

'' நான் அந்தப் பெண்ணை அவசியம் பார்த்தாக வேண்டுமே! எங்கே இருக்கிறாள் எனத் தெரிவிப்பீர்களா?''

''நான் சொல்வதற்கில்லை. அவள் மிக வசதியாக இருக்கிறாள். அவள் தயவில் நான்கு பேர் பிழைக்கும் நிலையில் இருக்கிறாள் என்பதைத் தவிர வேறு எந்த விவரமும் இந்த விடுதியின் விதிகளின்படி நான் கூற இயலாது !''

'' யார் கேட்டாலும் சொல்லமாட்டீர்களா ?''

''அவளைக் கொண்டு வந்து சேர்த்த அவள் அன்னை கேட்டால் கூறுவோம்.''

''அவர் வர இயலவில்லை என்றால் ?''

''தகுந்த ஆதாரத்தோடு அவர் நியமிக்கும் நபரிடம் கூறுவோம் !''






'' இதுதான் தங்களுடைய முடிவான பதிலா ?''

''ஒரே பதில்தான்! இதில் முடிவு என்ன?''

''எந்தவித சிறிய தகவலும் தரமாட்டீர்களா ?''

அந்த மாது சிரித்தாள்.

''நான் புறப்படுகிறேன்.''

அவள் தலையை அசைத்தாள்.

குமார் இறங்கி நடந்தான். இந்தப் பரந்த பட்டினத்தில் எந்தவித விவரமும் இல்லாமல் ஒரு பெண்ணை எப்படித் தேடுவது ? அவன் தீவிரமாகச் சிந்தித்தவாறே நடந்தான்.

கண்களில் ஒரு பெரிய விளம்பரப் பலகை பட்டது. அன்றைய தினம் மாலை நடக்கவிருக்கும் மெல்லிசையின் விவரம் அது. ''கண்

தெரியாத லாவண்யாவின் தேன் குரலைக் கேட்காமலிருந்து விடாதீர்கள்'' என்ற வாசகம் குமாரைச் சிந்திக்கத் தூண்டியது. விளம்பரத்தில் ஓர் இளம்பெண் கறுப்புக் கண்ணாடி அணிந்தவளாக ஓவியமாக நின்று கொண்டிருந்தாள்.

சிறிது நின்று கொண்டு அந்த விளம்பரத்தையே பார்த்துக் கொண்டிருந்தான் குமார்.

''இந்தப் பெண்ணுடைய சாமர்த்தியம் பார்த்தீர்களா? கண்ணைக் கொடுக்காத தெய்வம் தேனான குரலைக் கொடுத்திருக்கிறது!''

''கண் இல்லாததே பெரும் அதிர்ஷ்டம். சிந்தனைகள் பல கோணங்களில் போகாது. அதனால்தான் இந்தப் பெண் இவ்வளவு பிரகாசிக்க முடிகிறது.''

குமாரின் காதில் இந்த உரையாடல் தெளிவாக விழுந்தது. ஒரு வேளை இது மீராவாக இருக்கக் கூடுமோ? பெரிய மனிதனின் பெண் என்றாலோ அல்லது யாருடைய செல்வக் குமாரத்தியாக இருந்தாலோ அதை அழகாக அச்சிட்டிருப்பார்களே! என்ற எண்ணமும் எழும்ப அன்றைய நிகழ்ச்சிக்குச் சென்றான் அவன்.

பொற்கொடியென மேடையில் தோன்றினாள் லாவண்யா. அவளுடைய சிரிப்பும், அலட்சியமாக மேடை மீது உலாவுவதும், ஆடுவதும், ரசிகர்களை நோக்கிச் சிரிப்பதும் அயர வைத்தன குமாரை. 'அவள் பார்வையில்லாதவள் என்பது உண்மையா?' என்ற சந்தேகமே அவனுக்கு வந்துவிட்டது.

கச்சேரி முடிந்ததும் அவளைப் பார்க்க வேண்டும் எனச் சீட்டு அனுப்பி வைத்தான் குமார். அனுமதி கிடைத்தது.



அவனுடன் அவளுடைய காரியதரிசி போன்ற ஒரு பெண்கூட இருந்தாள்.

அவன் அந்த அறையின் நுழை வாயிலை அடைந்ததும், ''வாருங்கள், மிஸ்டர் குமார்! வணக்கம் !'' என்றாள் லாவண்யா. அதிர்ந்து போனான் அவன்.

'வணக்கம்' எனக் கூறியவன் அவள் கேட்டுக் கொண்டபடி ஆசனத்தில் அமர்ந்தான்.

'' நான் உங்களுக்கு என்ன செய்ய முடியும் மிஸ்டர் குமார் !'' அவள் பேச்சே பாடுவது போல் இருந்தது.

'' தங்கள் அன்னை அனுப்பி நான் வந்திருக்கிறேன்!''

'' என் அன்னை அனுப்பியா ?''

'லாவண்யாவின் குரலில் ஒலித்தது ஆச்சரியமா ? ஏகத்தாளமா ?' என்று அவனுக்குப் புரியவில்லை. உணர்ச்சியின் எதிரொளியான கண்கள் செயலற்ற பொழுது வேறு எந்த முடிவுக்கு வர முடியும் ?

''ஆம், லாவண்யா! தங்களுடைய அன்னை திருமதி தர்மா அனுப்பியே நான் வந்திருக்கிறேன் !''

உரக்கச் சிரித்தாள் அவள். ''தர்மா ! பெயரில்தான் அது இருக்கிறது'' என்றாள் சற்றுக் கோபமாகவே.

''லாவண்யா ! அவள் உன் அன்னை இல்லையா ? இப்படிக் கூறலாமா?''

''அன்னை ! எனக்கு அன்னையே கிடையாதே ! நான் அனாதை என என்னைப் புரிந்து கொண்டு, மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு பல வருடங்களாகிவிட்டன. இன்று எனக்கு அன்பு காட்டவும் ஆள் கிடையாது. நான் யாரிடமும் அன்பாக இருக்க வேண்டும் என்ற கடமையும் கிடையாது!'' ஆத்திரத்தோடு முடித்தாள் லாவண்யா.

''அப்படியெல்லாம் சொல்லக் கூடாது, லாவண்யா ! உங்கள் அன்னை உங்களைச் சந்திக்கத் துடித்துக் கொண்டிருக்கிறார் !''

''அன்னையா? யார் அது? இன்றைய என்னுடைய புகழ் யாரையும் என்னுடன் உறவாட விரும்பச் செய்யும்! அதுதானே உலகம்! இதுவரை தலைகாட்டாத அன்னை இப்பொழுது உருகுவது விந்தைதான் !''

''அன்னைக்கும் மற்றவர்களுக்கும் நிரம்ப வித்தியாசம் உண்டு லாவண்யா ! உன் புகழ் மற்றவர்களை இழுக்கலாம். ஆனால் அன்னை அதன் காரணமாகப் பெற்ற மகளை நாடமாட்டாள் !'' மிக நிதானமாகக் கூறினான் குமார்.

''மிஸ்டர் குமார் ! நீங்கள் நன்றாகப் பேசுகிறீர்கள். சட்ட நிபுணராகத் தொழில் செய்தால் நல்ல வெற்றி கிட்டும் உங்களுக்கு. ஆனால் ஒன்று. என் அன்னையைப் பற்றி உங்களைவிட மிக நன்றாக எனக்குத் தெரியும். என் கண்களில் பார்வை இல்லை. நான் குருடு. என்னை வைத்துக் கொண்டால் பெரும் சிரமத்தை ஏற்க வேண்டும் எனக் கருதியே என் தந்தை மறைந்ததும் என்னை ஏமாற்றி, சில தினங்களில் வந்து அழைத்துச் செல்கிறேன் எனக் கூறி, அனாதை விடுதியில் விட்டுவிட்டுச் சென்றுவிட்டாள். உண்மையாக ஒரு தாயின் உள்ளன்பும் நேசமும் இருக்குமாயின் என்னை அப்படி விட்டுப் போயிருப்பாளா ? அவள் விட்டுப் போன அன்றே நான் அனாதையாகி விட்டேன். அந்த விடுதியினர் அக்கறை காட்டி என் திறனை வளர்த்து இல்லாவிட்டால் என்னை நீங்கள் எங்கு வந்து பார்த்திருக்கப் போகிறீர்கள்? எனக்கு எந்த உறவும் வேண்டாம். நான் யாரையும் பார்க்க விரும்பவில்லை, என் போன்ற அனாதைகளுக்கு மற்ற அனாதைகள்தான் உறவு ! அன்னை என்ற உறவை இப்பொழுது எங்கிருந்தோ தேடி எடுத்துக் கொண்டு வந்து ஒட்ட வைக்க வேண்டாம். அன்னைக்கு நான் வேண்டாம் என்று ஒரு காலம் இருந்ததல்லவா ? இன்று எனக்கு அன்னை தேவையில்லை. என் நிம்மதியைக் குலைக்காதீர்கள்.'' பட்டென்று தன் இருக்கையை விட்டு எழுந்து கொண்டாள் லாவண்யா.

''லாவண்யா ! உங்கள் அன்னை மிகவும் பலவீனமான நிலையில் இருக்கிறாள். இதை என் கோரிக்கையாகவே எடுத்துக் கொள்ளுங்கள். சில விநாடிகள் சந்திக்க அனுமதி கொடுத்தால் போதும். இதனை மறுத்தால், வாழ்நாள் முழுதும் அதற்காகவே நீங்கள் வருந்த வேண்டி வரும்!'' குமாரின் குரலில் கண்டிப்பும் கலந்திருந்தது.

அவன் தொடர்ந்தான். ''உங்கள் அன்னை உங்களிடம் எந்த உதவியையும் எதிர்பார்க்கவில்லை. எந்த லாபத்தை எதிர்பார்த்தும் வரவில்லை. அன்பு மேலிட்டால்தான் இந்தக் கோரிக்கை!''

''சரி, அடுத்த வாரம், இந்தச் சபாவுக்கே வரட்டும். என்னுடைய நிகழ்ச்சிக்கு முன் என்னைச் சந்திக்க வேண்டாம். நிகழ்ச்சி முடிந்ததும் இரண்டே நிமிஷங்கள்!'' என்றாள் லாவண்யா, கண்டிப்பான குரலில்.

### பாத்திக் உடை !

மேட்டையில் உள்ள பெண் அழகா, அவள் அணிந்திருக்கும் ஆடை அழகா என்று நிர்ணயிப்பதே கடினம்தான், இல்லையா? அவள் பாத்திக் வண்ண உடையில் கண்ணைக் கவரும்படி காட்சியளிக்கிறாள். இந்தப் 'பாத்திக்' துணி தயாரிக்கும் முறையைக் கலைக் கல்லூரி ஆசிரியர் திரு கந்தசாமி விவரிக்கிறார் : சாதா மெழுகை உருக்கி எடுத்துக் கொண்டு அதனை மூங்கில் குழாயின் வழியாக நமக்கு வேண்டிய மாதிரி டிசைனைத் துணியின் மீது வரைவது போல ஊற்ற வேண்டும். பிறகு அதனை வர்ணத்தில் தோய்த்து எடுக்க வேண்டும். மெழுகு உள்ள இடம் தவிர மற்ற இடத்தில் வர்ணம் பற்றிக் கொள்ளும். இப்போது சூடு அதிகமான தண்ணீரில் போட்டு எடுத்தால் மெழுகெல்லாம் போய்விடும். இந்த மாதிரி நமக்கு வேண்டியவாறு எத்தனை முறை வேணுமானாலும் டிசைன்கள் போட்டு, வெவ்வேறு வர்ணங்களில் நனைத்து எடுக்கலாம்.

வண்ணப் படம்: உத்ரா






அண்ணாசாலை என்று பெயர் மாறாத மவுண்ட் ரோட் ஒன்று குளிர்ச்சி நகரமான குன்னூரில் இருக்கிறது. இங்கு ஒரு ஹோட்டலின் பெயர் நம் கவனத்தைக் கவருகிறது: ''ஹோட்டல் திருக்குறள்''!

உள்ளே நுழைகிறோம். சுவரில் பதிக்கப்பட்டுள்ளன ஏழு கரும்பலகைகள். ஒவ்வொன்றிலும் ஒரு திருக்குறள் விளக்கத்துடன் எழுதியிருக்கிறது! வியப்புடன் கல்லா அருகிலே செல்கிறோம். கல்லாப் பெட்டியடியில் அமர்ந்திருப்பவர் தமிழர் அல்லர்! ஐம்பது வயதான ஒரு மார்வாடி! ''ஹோட்டல் திருக்குறள்'' உரிமையாளர் கவுதம் சந்த் கூறுகிறார்: ''ஜெயினாக இருந்தாலும் சிறு வயதிலிருந்தே எனக்குத் திருக்குறள் மீது ஆர்வம்.

''அகர முதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு என்னும் குறள் 'அ' என்று ஆரம்பிப்பதாலும் ஆதி பகவன் என்று வருவதாலும் திருக்குறளை ஜெயின நூலாக ஏற்றுக்கொண்டுள்ளேன். திருக்குறளில் உள்ள கொல்லாமை, புலால் மறுத்தல் ஆகிய அதிகாரங்களில் உள்ள குறள்களை அச்சிட்டுப் பல பொது நிறுவனங்களுக்குக் கண்ணாடி போட்டு இலவசமாகக் கொடுத்துள்ளேன்.

'''திருக்குறள் அறநெறி மன்றம்' என்னும் அமைப்பு ஒன்றை ஏற்படுத்தியுள்ளேன். இதில் திருக்குறளில் கூறியுள்ளபடி நடக்கும் சிறுவர்களுக்குப் பரிசுகள் கொடுக்கப் போகிறேன். இந்தத் திட்டத்தை விரைவில் செயல்படுத்துவேன்.''

பேட்டி: வி.எஸ். ராஜகோபால்

---

''நன்றி லாவண்யா. தெய்வம் உங்களுக்கு ஒளிரிடும் எதிர்காலத்தைத் தரட்டும்!'' எனக் கூறி விடைபெற்றான் குமார்.

லாவண்யா குறிப்பிட்ட தினத்தன்று அவள் தாயுடன் அவன் நிகழ்ச்சிக்கு வரத் தவறவில்லை. தேனினும் இனிய குரலில் தன் மகள் பாடுவதையும், ரசிகர்களின் பாராட்டு தல்களையும் கேட்க, கேட்கத் தர்மாவுக்கு சந்தோஷம் தாங்கவில்லை. சிரித்துக்கொண்டேயிருந்தாள், தன்னையும் மறந்து. நிகழ்ச்சியின் நடுவில் பல பெரிய மனிதர்கள் லாவண்யாவைப் போற்றினர்.

நிகழ்ச்சி முடிந்ததும் உள்ளே சென்ற குமார், ''லாவண்யா! அம்மாவை அழைத்து வரலாமா?'' என்றான்.

'' ஓ! நினைவு இருக்கட்டும். நான் இரண்டு விநாடிகளுக்கு மேல் இருக்கமாட்டேன். நான் எதுவும் பேச மாட்டேன். இது உறுதி !''

'' உங்களை எந்தத் தொந்தரவும் செய்ய மாட்டோம், லாவண்யா ! உங்கள் அன்னைக்கு நடக்க முடியாது. சக்கர வண்டியில் தள்ளிக் கொண்டு வருவேன். இரண்டு விநாடி ஆனதும் நானே அழைத்துக் கொண்டு போய் விடுகிறேன் !''

லாவண்யா தலையை ஆட்டினாள்.

அடுத்த சில விநாடிகளில், சக்கர நாற்காலி ஒலியை லாவண்யா கேட்டாள். '' என் அருமை மீரா. எத்தனை அழகாகப் பாடினாய். தெய்வம் உனக்குத் தேன் குரலைக் கொடுத்திருக்கிறது. எனக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை, அம்மா!'' என்றாள் தர்மா உணர்ச்சி பொங்க.

லாவண்யா பதில் எதுவும் சொல்லவில்லை. அலட்சியம் அவள் முகத்தில் நிறைந்திருந்தது.

''என் செல்வ குமாரத்தி, என் கண்ணே ! சற்று அருகில் வா, அம்மா. உன்னை அணைக்க ஆசைப்படுகிறேன்!'' என்றாள் அவள்.

''லாவண்யா ! அவரால் நடக்க முடியாது. நீங்கள்தான் அருகில் வரவேண்டும்!'' என்றான் குமார்.

வேண்டா வெறுப்பாக அவன் கொடுத்த கைத்தடியைப் பிடித்துக் கொண்டு அருகில் வந்தாள் லாவண்யா.

''என் உயிரே!'' தாயின் பாசம் ஒலித்தது குரலில். அவள் கரங்கள் லாவண்யாவை வருடின. உச்சந் தலை முதல் கால் வரையில் தடவிப் பார்த்தாள்.

''அம்மா.... அம்மா.... நீங்களும்..... ''. குரல் பதைபதைக்கக் கேட்டாள் லாவண்யா.

''ஆம், என் செல்வமே! நானும்தான் ! நானும் குருடுதான். உன் தந்தை இறந்த பிறகு என் பார்வை மங்கி வருவதை உணர்ந்தேன். வைத்தியர் கூறினார், நான் குருடாகிக் கொண்டிருக்கிறேன் என்று. ஆம், கண்ணு ! அதைக் கேட்டதும் நான் எனக்காக வருந்தவில்லை! உன்னை நினைத்துத்தான் கதறினேன். உனக்குப் பலமாக இல்லாத நான் பாரமாக இருக்கக் கூடாது பார். அதனால் தான் உன்னை அந்த விடுதியில் சேர்த்தேன். உனக்கு விஷயம் தெரிந்தால் அதிர்ச்சியாக இருக்குமே என்றுதான் உன்னிடம் சொல்லவில்லை. நீ நல்ல முறையில் வளர்ந்துவிட்டாய். தெய்வத்தின் கருணை. எனக்கு இந்த நிறைவு போதும். உனக்கு என் மேல் உள்ள கோபம் எனக்குப் புரிகிறது. பார்வையும், பணமும் இல்லாத இந்த ஏழை அன்னை வேறு என்ன செய்திருக்க முடியும், அம்மா!'' தர்மாவின் குரல் உடைந்தது. சக்கர வண்டி நகர்ந்தது. லாவண்யா, ஒலியின் மூலம் இடத்தை உணர்ந்து பாய்ந்தாள்.

''அம்மா! என்னை விட்டுவிட்டுப் போகாதீர்கள். என்னால் தனியாக இருக்க முடியாது. குருடுக்குக் குருடுதான் அம்மா துணை! நான் அறியாமல் வார்த்தைகளைக் கொட்டிவிட்டேன் ! நீங்கள் எப்படி உங்களைக் கட்டுப் படுத்திக் கொண்டு எனக்கு வழி வகுத்திருக்கிறீர்கள்!'' அவள் வார்த்தைகள், சொரியும் புஷ்பங்களாகத் தோன்றின தர்மாவுக்கு.

குமார் முறுவலித்தான். லாவண்யாவை அழைத்து அவள் அன்னையின் கரத்தில் இணைத்தான். ''லாவண்யா ! எந்தத் தாயும் தன் சேய்க்கு எந்தத் துரோகமும் செய்வதில்லை! கடுமையான பெண்கூடத் தாயிடம் பாகாக உருகிவிடுவாள் அம்மா !'' என்றான்.

அதன் பொருளைப் பூரணமாக அவள் புரிந்து கொண்டு விட்டாள் என்பதை அவள் செய்கை உணர்த்தியது. அவள் அன்னையை வருடினாள். அன்னை மகளை வாழ்த்தினாள். கண்களின் நீர் சங்கமமாகின.



## 11

கபூருக்கு ராகேஷ் — விஜயா நடந்து கொண்ட விதம் ஏமாற்றம் அளித்தது. விஜயாவிடம் தாம் அவ்வளவு சொல்லி யிருந்தும்!...அவர்கள் இருவரும் ஒருவரை ஒருவர் அப்படி விரும்பும்பொழுது தம்மால் என்ன செய்ய முடியும்?—ராகேஷ் வீட்டை விட்டுப் போய்விட்டான். இதைத்தான் அவரால் தாங்கிக் கொள்ள முடியவில்லை... ஐ லேக்ட் தட் பாய் வெரி மச்...அவனும் போய் விட்டான்.

''நீங்கள்தான் இந்த வீடு உருப்படாமல் போனதற்குக் காரணம்.''

''இந்த வீடு உருப்படாமல் போனதற்கு யார் காரணம் என்பது இந்த வீட்டில் உள்ள அனைவருக்கும் தெரியும். நீ இல்லாமலிருந்திருந்தால் இந்த வீடு வீடாக இருந்திருக்கும்!''

''படுபாவி! நான் சாக வேண்டுமென்கிறாயா?''

''நான் விரும்பியதெல்லாம் நடப்பதில்லை என்பதுதான் என் துரதிருஷ்டம்...'' என்று சொல்லிக் கொண்டே தம் அறையை நோக்கி நடக்கத் தொடங்கினார் கபூர்.

மோகினிக்கு எல்லையற்ற சினத்தால் என்ன செய்வதென்று புரியவில்லை. மேஜையின் மீதிருந்த டெலிபோனை ... ஏரிந்தான். ...கவரில் மாட்டியிருந்த ஓர் அழகிய ஓவியப் படத்தை எடுத்துக் கீழே போட்டு உடைத்தாள். டைனிங் டேபிளிலிருந்த கோப்பைகளும் தட்டுக்களும் கீழே விழுந்து துகள் துகளாயின.

கபூர் திரும்பிப் பார்த்தார். திடீரென்று அவள்பால் அவருக்கு ஒரு பச்சாத்தாப உணர்ச்சி மேலிட்டது. தாம் செய்தது தவறு என்று சொல்லி அவளைச் சமாதானப்படுத்தலாமா என்று ஒரு கணம் நினைத்தார். கூடாது. தன் வெறியைக்கண்டு தானே அவமானப்படும்வரை அவள் என்ன வேண்டுமானாலும் செய்யட்டும். இதுவே அவளுக்குத் தண்டனை.

அசோக்கும் அவன் மனைவி சசியும் அங்கு வந்தார்கள். அசோக் கபூரையும் மோகினியையும் மாறி மாறிப் பார்த்தான்.

''அம்மா, என்ன செய்கிறாய்?'' என்று மோகினி அருகே சென்று கேட்டான்.

''நீ உன் வேலையைப் பார்த்துக் கொண்டு போ. உன் அருமை மனைவியை அழைத்துக் கொண்டு போ. கதவைத் தாளிட்டுக்கொள். அநாவசியமாகக் குறுக்கிடாதே.''

''நீ வீட்டை நாசப்படுத்திக் கொண்டிருப்பதை என்னால் பார்த்துக் கொண்டிருக்க முடியாது.... உனக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா?''

''கெட் அவுட்'' என்று வீடு அதிரும்படியாக மோகினி கத்தினாள்.

இதற்குள் அங்கு, ஸ்வர்ணா, ரூபி, சதீஷ், பாபி, அஞ்சலி ஆகிய எல்லோரும் கூடி விட்டார்கள்.

''ஆமாம்... எனக்குப் பைத்தியம் பிடித்து விட்டது. உங்கள் அப்பனைக் கல்யாணம் செய்து கொண்டிருப்பதினால் பைத்தியம் பிடித்து விட்டது. உங்களையெல்லாம் பெற்றெடுத்ததினால் பைத்தியம் பிடித்து விட்டது. அதோ இருக்கிறான் பார், சதா சர்வ காலமும் குடித்துக் கொண்டு, கும்மாளம் போடுகிறானே உன் அக்கா அவளால் பைத்தியம் பிடித்து விட்டது.... பெண்டாட்டியைக் கட்டி மேய்க்கத் தெரியாமல், என்னைக் கொல்ல வேண்டுமென்கிறானே, உன் அருமை அண்ணன் அவனால் எனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது. சீ!... இது ஒரு வீடா?... வேலைக்கார நாயைத் தூக்கிக் கொண்டு ஓடுகிறான் ஒரு பிள்ளை. எனக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா என்று கேட்கிறாயே,... உன் பெண்டாட்டியைக் கேட்க உனக்குத் தைரியம் உண்டா? செருப்பால் அடித்திருப்பாள்....''

''ஐ திங்க் ஷீ ஈஸ் ஸிக்'' என்றார் கபூர்.

அவள் அப்படிச் செய்வாள் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை. அவள் திடீரென்று கபூரின் மீது பாய்ந்து அவர் அணிந்திருந்த 'டை'யின் முடிச்சைக் கழுத்தில் போட்டு இறுக்கினாள். அவரால் மூச்சு விட முடியவில்லை. அவரை அவளிடமிருந்து விடுவிப்பது என்பது பெரும் பாடாக இருந்தது. அத்தனை அசுர பலம் அவளுக்கு எப்படி வந்தது என்று புரியவில்லை. கடைசியில் ஒரு வகையாக இழுத்து அவளைச் சோபாவில் தள்ளினார்கள்.

கபூர் தம் அறையை நோக்கிச் சென்றார். கதவைத் தாளிட்டுக் கொண்டார். ஐம்பது வருஷங்களுக்குப் பிறகு அழுகை அவருக்குப் பீறிட்டுக் கொண்டு வந்தது. கடைசியாக அவர் அம்மா போனபோது அழுததுதான். கட்டிலில் உட்கார்ந்து கொண்டு கேவிக் கேவி அழுதார். இந்த வீட்டில் இனிமேல் தம்மால் இருக்க முடியாது. தம்மைக் கொல்லப் பார்த்த மனைவியிடமிருந்து குழந்தைகள் தம்மை விடுவிக்க வேண்டியிருந்தது. மோகினி இனி உயிருடன் இருக்கக் கூடாது... அவள் சாக வேண்டும்.... அவள் சாகவேண்டும்... அவள் சாக வேண்டும்....

உலகத்தில் யாருக்குமே தம்மைப் போன்ற அதிர்ஷ்டம் வேண்டாம்.... வாழ்க்கையில் நல்லதையே அறியாத ஒரு கிழவியைப் போல் தாம் சாபம் கொடுப்பது அவருக்கு வெட்கமாக இருந்தது. இந்த நிலைக்குத் தம்மைக் கொண்டு வந்தது யார்? — அவள் தான்.....

அவள் சொல்வது உண்மைதான்...இந்தப் பங்களா, பணம், அந்தஸ்து எல்லாம் அவளுடைய அப்பாவுக்குச் சொந்தம். அவளுடைய அப்பாவின் உதவி இல்லா விட்டால் என்னால் இந்த அளவுக்குப் படித்திருக்க முடியாது. சுமாராகப் படித்துவிட்டு ஏதேனும் ஓர் அலுவலகத்தில் ஒரு குமாஸ்தாவாகச் சேர்ந்திருப்பேன்.... பொருளாதாரப் பிரச்னையைத் தவிர வேறு எந்தக் கஷ்டமும் இருந்திருக்காது. பணம் இருந்தாலும் பிரச்னை, இல்லாவிட்டாலும் பிரச்னை... பணப் பரிவர்த்தனை இல்லாத அக்காலச் சமூகங்கள் எவ்வளவு சந்தோஷமாக இருந்திருக்க வேண்டும்! என்னால் இப்பொழுது இந்தப் பங்களாவோ, பணமோ அல்லது அந்தஸ்தோ வேண்டாமென்று போக முடியுமா? அப்படிப் போனால் நேற்றிரவு தங்கிய ஹோட்டலில் தங்க இயலாது. ஷம்மீனும் போய்விடுவாள். என்னுடைய வீட்டு அந்தரங்கங்களை யாரும் விவாதிக்க மாட்டார்கள். ரத்தன்லால் சொன்னானே, அந்த நகரகத்துத் தொழிலாளியைப் போல், நானும் என் மனைவியைக் கொன்றால், செய்தித் தாளில் அச் செய்தி வராது. நான் என்னை மறந்தாலும், சமூகம் என் மனைவியின் அந்தஸ்தை மறக்குமா?



சமுதாயத்தில் எல்லோரும் என்னைத் தனித்துக் காண வேண்டும் என்ற உருவ வேட்கையில் நான் இழந்திருப்பதுதான் எத்தனை எத்தனை? இனிமேல் தப்பித்துக் கொண்டு ஓடுவது என்பது இயலாத காரியம்.... எது என்னுடைய உண்மையான உருவம்? மோகினியின் கணவனா? — பொருளாதார மேதை கபூரா?... நேற்றிரவு ஷம்மீனின் அரவணைப்பில், பாதுகாப்பில், அந்தக் கணத்து இன்பமே சொர்க்கமாகக் கண்ட, போர்வைகள் எல்லாம் நீங்கிய, வெறும் பௌதிகத் தோற்றமா?—

யாரோ கதவைத் தட்டும் சப்தம் கேட்டது. கபூர் எழுந்திருந்து போய்க் கதவைத் திறந்தார்.

மான்சிங் கையில் தேநீர்க் கோப்பையுடன் நின்று கொண்டிருந்தான்.

அவர் அதை அவனிடமிருந்து வாங்கிப் பருகினார். சூடான தேநீர் நெஞ்சுக்குள் இதமாக இறங்கியது.

''மெம் சா(ஹ)ப் என்ன செய்கிறார்கள்?'' என்று கேட்டார் கபூர்.

''காரிலே ஏறி எங்கேயோ அவசரமாகப் போனார்கள்.''

அவருக்கு நிம்மதியாக இருந்தது.

அவர் தம் அலுவலக அறைக்குள் நுழைந்து உட்கார்ந்ததும் மணி வந்தான்.

''அந்தப் பெண் வேலை வேண்டாமென்று போய்விட்டாள்'' என்றான் மணி.

''எந்தப் பெண்?''

''மிஸ் விஜயா.''

கபூர் ஒன்றும் பேசவில்லை. மேஜையின் மீது ஃபைல்களைப் புரட்டிக் கொண்டிருந்தார். ராகேஷுடன் எங்கே போயிருப்பாள்? ஊரை விட்டே போயிருப்பார்களோ? ராகேஷையும் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்றிருக்கலாம்... அவள் எங்கே இருக்கிறாள்?— அவளைத் தமக்குச் சிபாரிசு செய்தவரைக் கேட்டால் தெரியும். இப்பொழுது அதைப் பற்றி என்ன கவலை? அவர்களிருவரும் சந்தோஷமாக இருந்தால் சரி.... இருந்தாலும் அந்தப் பெண் தம்மிடம் சொல்லிக்கொள்ளாமல் போனது அவருக்கு ஒரு குறையாகப்




பட்டது. ராகேஷிடம் அவர் நம்பிக்கை வைத்திருந்தார். இப்பொழுது அதுவும்போய் விட்டது. இன்று இரவு ஷர்மீளைப் பார்க்க வேண்டும். கமல்... கமலாக்குப் பிறகு... வாழ்க்கையில் இனிமேல் தமக்கு என்ன இருக்கிறது?...

"நேற்று நீங்கள் போன பிறகு மிஸ்டர் ராகேஷ் இங்கு வந்திருந்தார். மிஸ் விஜயாவை அழைத்துக் கொண்டு போனார். இப்பொழுதுதான் மிஸ்டர் ராகேஷ் ஃபோன் செய்தார், மிஸ் விஜயா இனிமேல் வேலைக்கு வரமாட்டாளென்று" என்றான் மணி.

"எனக்குத் தெரியும். நீ போய் உன் வேலையை பார்" என்றார் கபூர்.

" நான் கேட்ட விடுமுறை..." என்று இழுத்தான் மணி.

" நீ எப்பொழுது வேண்டுமானாலும் போகலாம். நீயே ஓர் ஆளைப் பார்த்து வைத்து விட்டுப் போ" என்றார் கபூர்.

மணி போய்விட்டான்.

அவனிடம் வழக்கத்துக்கு விரோதமாகக் கொஞ்சம் கடுமையாகப் பேசி விட்டோமோ என்று நினைத்தார் கபூர். நல்ல பையன். விஜயா இவனை மணந்து கொள்கிறேன் என்று சொல்லி யிருந்தாள், சந்தோஷத்தில் அழுதிருப்பான். ஸ்டுப்பிட் கேர்ல்! பணக்காரன் வீட்டுப் பிள்ளைதான் அவளுக்கு வேண்டி யிருக்கிறது! — ராகேஷ் பின்னால் எப்படி நடந்து கொள்வான் என்று யாரால் என்ன சொல்ல முடியும்? — மோகினியின் பின்னே....! இந்த ஆரம்ப காதல், வாழ்க்கை முழுவதும் தாக்குப் பிடிக்குமா?— நான் சொல்ல வேண்டியதை அவளிடம் சொல்லியாகி விட்டது. அப்படியும் அவள் ராகேஷைத் தொற்றிக் கொண்டு போயிருக்கிறாள். நான் என்ன செய்ய முடியும்?—

ஃபோன் வந்தது.

"டாக்டர் சாட்டர்ஜி பேச வேண்டுமென்கிறார்" என்றான் மணி.

"சரி, கொடு."

"குட் மார்னிங் டாக்டர் சாட்டர்ஜி! ஓ... மை காட்... மத்தியானம் நாலு மணிக்குப் பார்க்க வேண்டுமில்லையா?... மறந்தேபோய் விட்டேன். எஸ்... குறிப்புத் தயாரித்துக் கொண்டு வருகிறேன். நேற்று திடீரென்று தீர்மானமான 'அப்பாய்ண்ட்மெண்ட்' இல்லையா, என் பி. ஏ.விடம் சொல்ல மறந்தே போய்விட்டேன்.... ஓ.கே.... நான் வருகிறேன், அங்கே... தாங்க் யு" என்றார் கபூர்.

உடனே 'இன்டர்-கா'மில் மணியைக் கூப்பிட்டார்.

மணி குறிப்புப் புத்தகத்துடன் வந்தான்.

"இன்று நாலு மணிக்கு நிதி மந்திரியைப் பார்க்கப் போகிறேன். நேற்று தீர்மானமான விஷயம். சொல்ல மறந்து விட்டேன்.

# சிறப்புமிக்க,
# சிக்கனமான
# பத்திரமாக
# பல்லாண்டு உழைக்க
# ஒரு ட்ரக் இதோ !

# நவீன
# டாடா ட்ரக் 1210 எஸ்
# புதிய ஜிபி 30
# கியர் பாக்ஸுடன்கூடிய
# ஸெமி-ஃபார்வர்ட்
# கண்ட்ரோல்

தீவிர ஆராய்ச்சியும் முன்னேற்றமான
முயற்சிகளும மேற்கொண்டு இந்த
டாடா 1210 எஸ் ட்ரக் டிஸைன் செய்யப்பட்டது.
ட்ரக் ஓட்டுபவரின் கனவையெல்லாம்
நிஜமாக்கவல்ல நயமான தோற்றங்கொண்டது
இந்த வாகனம்.

ட்ரக் ஓட்டுபவர் விரும்புவது என்ன?
நாங்கள் அவருக்குத் தருவது என்ன?

**லாபகரமானது**

டாடா 1210 எஸ், மிகவும் சிக்கனமாக அதிக பாரத்தைச் சுமக்கிறது. வசதியுடன் ஏராளமான பளுவை ஏற்றிச் செல்கிறது. சுமையை சீராக விநியோகிக்கிறது. குறைவான நேரத்தில் அதிகமான சுமையை இறக்குகிறது. நீடித்த நாள் உழைக்கிறது. ஓட்டிச்செல்ல அதிக நேரம் கிடைக்கிறது. இது போன்ற பலவித நயமான அம்சங்களுடன் டிஸைன் செய்யப்பட்டது. ஆகவே நீங்கள் செலவிடும் ஒவ்வொரு ரூபாய்க்கும் அதிக பட்ச சுமையை நீண்ட தூரத்திற்கு சுமந்து சென்று விநியோகிக்கும் நன்மையைப் பெறுகிறீர்கள்.

**சக்தி**

■ கடும் சோதனை செய்யப்பட்டு சிறந்தது என நிரூபிக்கப்பட்ட டைரக்ட் இன்ஜெக்ஷன் என்ஜின்.

■ புதிய ஜிபி 30 5-ஸ்பீடு கான்ஸ்டன்ட் மெஷ் கியர் பாக்ஸ் நீண்ட நாள் உழைப்பைத் தருவதுடன் ஏற்ற இறக்கமுள்ள செங்குத்தான பாதைகளில் கடந்து செல்லும்போது லோயர் கியர்களை எளிதாக இயக்கவும் உதவுகிறது.

■ நீடித்துழைக்க உருண்டையான டிஃபரன்ஷியல் கியர்களுடன் கூடிய ரியர் அக்ஸில்.

**பராமரிப்பது சுலபம்**

■ தினந்தோறும் பராமரிப்பதில் செலவு குறைவு.

**பத்திரமானது, பாங்கானது**

■ நன்றாக தெளிவாகப் பார்ப்பதற்கு செமி-ஃபார்வர்ட் கண்ட்ரோல்.

■ தடை எதுவுமின்றி பார்ப்பதற்கு ஒரே துண்டினாலான வளைந்த விண்ட்ஷீல்டு.

■ மிகவும் அநுபாசமான ஸ்டியரிங் வசதி கொண்டது.

■ சுலபமாக இயக்குவதற்கு ஸ்டியரிங் பகுதியில் உள்ள ஹார்ன், டிப்பர் மற்றும் பிளிங்கருக்கென காம்பி-ஸ்விட்ச்.

■ எளிதாக படிப்பதற்குத் தகுந்த சாதனங்கள். இயக்கும் வால்வுகளைக் கொண்ட காஜ்கள் சம கோணத்தில் (9 மணி நிலையில்) உள்ளவை.

■ சமச்சீர் இல்லாத டிப்டு பீமுடன் கூடிய நீண்ட சதுரமான ஹெட் லாம்புகள் இருப்பதால் கண்கூசாத ஒளி கிடைக்கிறது.

■ பெரிய பிளிங்கர்கள்.

■ என்ஜின் எக்ஸாஸ்ட் ப்ரேக் உதவியினால் சரிவான பாதைகளில் கீழ்நோக்கி ஓட்டும் போது நல்ல கண்ட்ரோல் கிடைக்கிறது. ப்ரேக் ட்ரம்களுக்கும் லைனர்களுக்கும் தேய்மானம் அதிகம் ஏற்படுவதில்லை. எரிபொருள் செலவும் குறைகிறது.

■ மிகவும் நீண்ட ஓய்ப்பர் அதிக பரப்பைச் சுத்தம் செய்கிறது.

■ முன்னும் பின்னுமுள்ள ஸ்பிரிங்குகள் உறுதியானவை.

■ சிறிதும் களைப்பில்லாமல் ஓட்ட, ஓட்டுபவருக்கு சுகமான இருக்கையிடம்.

■ ஏர் ஸ்கூப்ஸ் வழியாக கட்டுப்படுத்தப்பட்ட அதிக காற்றோட்டமுள்ள காபின்.

■ தெளிவாகப் பார்க்கும் பொருட்டு சன்ஸ்பாட் மஞ்சள் நிறத்தில் பெயிண்ட் செய்யப்பட்டது.

இதுதான் டெல்கோ அளிக்கும் புதிய டாடா 1210 எஸ். இந்தியாவிலேயே முழுக்க முழுக்க டிஸைன் செய்யப்பட்டு தயாரிக்கப்பட்டது.

ட்ரக் ஓட்டுபவரின் எல்லாத் தேவைகளையும் நிறைவேற்ற, கடுமையாக சோதனை செய்யப்பட்டது.

**உங்களுக்கு அருகாமையிலுள்ள டெல்கோ டீலரின் ஷோ ரூமில் டாடா 1210 எஸ்ஸை இன்றே பாருங்கள்.**

## டெல்கோ — என்றும் உயர்தர வாகனத்தை உருவாக்குபவர்கள்.



டாடா என்ஜினியரிங் அண்ட் லோகோமோடிவ் கம்பெனி லிமிடெட்.
148, மகாத்மா காந்தி ரோடு, பம்பாய்.



**அடுத்த ஆண்டில்....**

சென்னையில் வெளியாகி உலகப் புகழ்பெற்றுள்ள தினசரி 'இந்து'வின் நூற்றாண்டு 1976ல் தொடங்குகிறது.

அமெரிக்காவில் கண்டு பிடிக்கப்பட்ட (கிரகாம் பெல்லின்) டெலிபோன்கூட, 1876ல் தொடங்கியதுதான்........அதன் நூற்றாண்டும் அடுத்த 1976ல்தான்!

— ஏ. சுவாமிநாதன்

நான் குறிப்புத் தயாரிக்க வேண்டும். இங்கு ஆபீஸில் இருந்து கொண்டு செய்ய முடியாது. யாராவது வந்து கொண்டே இருப்பார்கள். நான் வேறு இடத்துக்குப் போகிறேன்.... யார் வந்தாலும் அவசரமாகப் போயிருக்கிறார் என்று சொல்லிவிடு...''

அவர் எழுந்திருந்தார். சில வியாபார நிறுவனங்களின் ஃபைல்களை எடுத்துத் தரும்படி சொன்னார். அவற்றைச் சிறிது நேரம் புரட்டிப் பார்த்தார்.

''சரி... இவற்றைக் காரில் கொண்டுபோய் வைக்கச் சொல்... எஸ். டி. வி. ஃபைலையும் எடுத்து வை.''

அவர் இயந்திரமானார்.

**சா**யந்திரம் ஆறு மணிக்கு நிதி மந்திரியைப் பார்த்துவிட்டுக் காரியாலயத்திலிருந்து அவர் வெளியே வந்தார். அவர் மிகவும் கோபமாக இருந்தார்.

''தேர்தலை மனத்தில் வைத்துக் கொண்டே தினசரிப் பொருளாதாரப் பிரச்னைகளைத் தீர்ப்பது என்பது எப்படி முடியும்? நாட்டின் எதிர்காலத்தை நினைக்கும்போது... எனக்குப் பயமாக இருக்கிறது'' என்றார் டாக்டர் சாட்டர்ஜி.

''வாழ்க்கை மிகவும் தாற்காலிகமானது என்ற மாயைத் தத்துவத்தின் அடிப்படையில் நாட்டின் பொருளாதாரப் பிரச்னைகளைத் தீர்க்க முயன்றால், வேறு என்ன பலன்களை எதிர்பார்க்க முடியும்? 'கோஷங்கள' என்ற கொள்ளைக் காட்டிக் கொண்டே ஒரு நாட்டை இயங்க வைக்கப் பார்க்கிறார்கள். இது மக்கள் குதிரைகளாயிருந்தால்தான் முடியும்'' என்றார் கபூர்.

''வாழ்க்கை மிகவும் தாற்காலிகமானது என்ற மனப்பான்மையைக் குறிப்பிட்டீர்களே, இது சரியான வார்த்தை. இந்த மனப்பான்மை வேரூன்ற விஞ்ஞானமும் ஓரளவு காரணம். பிரபஞ்ச எல்லைகளைக் கால ரீதியாகக் கணக்கிடும் இப்பொழுது, அதாவது ஒளி வருஷங்களைப் பற்றிப் பேசும் இக்காலத்தில், தனிப்பட்ட மனித வாழ்க்கை தாற்காலிகமானது என்ற நினைவிலிருந்தும் எப்படித் தப்ப முடியும்?'' என்றார் டாக்டர் சாட்டர்ஜி.

''நம் அரசியல்வாதிகளுக்கு இவற்றைப் பற்றியெல்லாம் தெரியுமென்ற அநுமானத்தில் நீங்கள் பேசுகிறீர்கள். அவர்களைப் பொறுத்தவரையில் தேர்தலில் வெற்றி பெறுவது என்பது பிரபஞ்சத்தின் எல்லைகளைக் காண்பது மாதிரி. இச்சமயம் தாங்கள் தேர்தலில் வெற்றி பெற்றால் போதும் என்ற எண்ணத்தில், ஐந்தைந்து வருஷங்களாகத் தங்களுடைய வாழ்க்கையைக் கணக்கிடும் மனப்பான்மையில் நாட்டின் எதிர்காலத்தையும் அவர்கள் நிர்ணயிக்கிறார்கள் என்று நான் குறிப்பிட்டேன். விஞ்ஞான — தத்துவார்த்த ரீதியாக நான் சொல்லவில்லை'' என்றார் கபூர்.

**கா**ரில் இருவரும் உட்கார்ந்தார்கள்.

''என்னை வீட்டுக்கே கொண்டு போய் விடுங்கள். என் பையனுக்கு ஃபோன் செய்து ஆஃபீஸிலிருந்து காரை எடுத்துக் கொண்டு போய்விடும்படி சொல்லி விட்டேன்'' என்றார் டாக்டர் சாட்டர்ஜி.

''நான் ஒரு நிமிஷம் என் ஆபீசுக்குப் போய்விட்டு வந்துவிடுகிறேன்''என்றார் கபூர்.

''ஓ எஸ்... பை ஆல் மீன்ஸ்.''

டாக்டர் சாட்டர்ஜி 'பைப்'பில் புகையிலையை நிரப்பிக் கொண்டு அதைப் பற்ற வைத்தார்.

''மிஸ்டர் கபூர்! எனக்கு இப்பொழுதெல்லாம் மரணத்தைப் பற்றிய பயம் ஏற்பட்டிருக்கிறது'' என்றார் டாக்டர் சாட்டர்ஜி.

''ஓட்டப் பந்தயத்தில் எல்லையை நெருங்கும்போது படபடப்பு ஏற்படுவது இயற்கைதான்.... உங்களுக்கு எத்தனை வயதாகிறது, டாக்டர்?''

''எழுபத்தி எட்டு. என்னைப் பார்த்தால் அப்படித் தோன்றவில்லையா?'' என்று புன்னகையுடன் கேட்டார் டாக்டர் சாட்டர்ஜி.

''நோ... உங்களை ஐம்பது வயதுக்கு மேல் மதிப்பிட மாட்டார்கள். ஒரு நிருபர் மாதிரி கேட்கிறேன், உங்கள் இளமையின் ரகசியம் என்ன?''

''பைப், ட்ரிங்க்ஸ் அண்ட் விமன்.''

கபூர் சிரித்தார். ''உங்கள் வாழ்க்கை வரலாற்றை ஏன் நீங்கள் எழுதக் கூடாது? என்னைப் போன்ற 'இளைஞர்'களுக்கு உபயோகமாக இருக்குமே?''

''எதைச் செய்தாலும் ஒரு குற்ற உணர்ச்சியோடு செய்யக் கூடாது. குற்ற உணர்வுதான் பாதி 'டென்ஷன்'களுக்குக் காரணம்.''

''இப்படி இருக்கும் உங்களுக்கு மரணத்தைப் பற்றி ஏன் பயம் ஏற்பட வேண்டும்?''

''இவ்வளவு சுவாரஸ்யமான மனித வாழ்க்கை முடிவடையப் போகிறதே என்ற பயம்தான். தேர்தலில் எந்த மந்திரிதான் தோற்க விரும்புவார்? அதே போல் என்று வைத்துக் கொள்ளுங்கள்.''

ஆஃபீஸ் வாசலில் மணி நின்றுகொண்டிருந்தான்.

''என்ன மணி, புறப்பட்டு விட்டாயா?'' என்று கேட்டார் கபூர்.

''ஒரு நிமிஷம் இப்படி வர முடியுமா?'' என்று அவரைத் தனியே அழைத்தான் மணி.

கபூர் காரிலிருந்து இறங்கி அவனருகே சென்றார்.

''உங்கள் அறையில் மிஸஸ் கபூர் இருக்கிறார்கள். மிகவும் கோபமாக இருப்பதுபோல் தெரிகிறது.''

கபூர் மறுபடியும் காரில் போய் உட்கார்ந்தார். ''உங்களை வீட்டில் கொண்டு போய் விடுகிறேன், டாக்டர்... ஆஃபீசுக்குப் போக வேண்டிய அவசியம் இல்லை என்று தோன்றுகிறது'' என்றார் கபூர். (தொடரும்)

# தலைவலி உங்களைத் தாக்கும்போது சாரிடான் கொண்டு அதைத் தாக்குங்கள்.






உங்கள் எல்லாத் தலைவலிகளையும் போக்குகிறது ஒரே ஒரு **சாரிடான்**

ரோச்



# டாக்டருக்கு ஆபத்து!

ஒரு ராணுவ வீரர் அல்லது சர்க்கஸ் ரிங் மாஸ்டரைப் பார்த்தால் எவ்வளவு ஆபத்தான வேலையில் ஈடுபட்டிருக்கிறான் என்று ஆச்சரியத்துடன் பேசுவோம். ஆனால் ஒரு டாக்டரைப் பற்றி அவ்வாறு எண்ணுவது அரிது.

எனினும் உண்மையில் டாக்டருக்கு ஆபத்துக்கள் மிக அதிகம். இது புள்ளி விவரப் படியே நிரூபணமாகியிருக்கிறது.

அரசாங்க பென்ஷன் வாங்கும் டாக்டர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் குறைந்து வருகிறது. வேறு பல தொழில்களில் ஈடுபட்டுள்ளவர்களை ஒப்புநோக்கையில் டாக்டரின் ஆயுட்காலம் மிகவும் குறைவு எனச் சமீபத்திய ஆராய்ச்சி தெளிவுபடுத்துகிறது. அதாவது சராசரியில் மற்றவர்களைக் காட்டிலும் சின்னவயதில் டாக்டர் இறந்துவிடுகிறார்.

சில துறைகளில் விசேஷப் பயிற்சி பெற்றுள்ள டாக்டர்களுக்கு அந்த விசேஷப் பயிற்சியே ஆபத்தாக முடிகிறது. உதாரணமாக ஆபரேஷன் தியேட்டரில் மயக்க மருந்து செலுத்தும் டாக்டர் ஆபத்தான வாயுக்களைச் சதா சுவாசிக்கிறார். இதனால் இருவிதமான தொல்லைகள். அவர் உடலில் கொஞ்சம் கொஞ்சமாக விஷம் கலக்கப்படுகிறது என்பது ஒன்று. மற்றது அந்த வாயுவுக்கோ அல்லது மயக்கம் தரும் ஊசி மருந்துக்கோ அவரே அடிமையாகி விடுவது. மதுப் பழக்கம் போல் இதுவும் விட்டுத் தொலைக்க முடியாத பழக்கமாகிவிடும்.

எக்ஸ்ரே படம் எடுக்கும் டாக்டர்கள் லூகிமியா என்ற நோயினால் பாதிக்கப்படலாம். இது கதிரியக்கத்துக்கு அடிக்கடி ஆளாவதால் ஏற்படும் பொல்லாத நோய்.

மனநோய் மருத்துவர்கள் பிறரது மனப் போராட்டங்களையும் உணர்ச்சிக் குவியல்களையும் அலசி ஆராய முற்பட்டு அதிலேயே ஆழ்ந்துவிடுவதால் தங்களது சொந்த மனப் பிரச்னைகளை அலசிப் பார்க்க அவர்களுக்கு நேரமே இல்லாமல் போய்விடுகிறது. வேறு எந்தப் பணியில் ஈடுபட்டிருப்பவர்களையும் விட மனநோய் மருத்துவர்கள் தற்கொலை செய்துகொள்வது அதிகம்!

பரிசோதனைச் சாலையில் எந்த நோய்க் கிருமிகளை ஆராய்கிறார்களோ அந்தக் கிருமிகளாலேயே பாதிக்கப்படும் டாக்டர்களும் உண்டு. எத்தனையோ டாக்டர்கள் அம்மை, காசம், பிளேக் போன்ற நோய்க் கிருமிகளை ஆராயப் போக அந்த நோய்களுக்கே ஆளாகி மாண்டிருக்கிறார்கள். தீவிர ஆராய்ச்சி மனப்பான்மை கொண்ட சில டாக்டர்கள் பரிசோதனைகளை முன்னிட்டுக் கிருமிகளைத் தங்கள் உடலிலேயே செலுத்திக் கொண்டிருக்கிறார்கள்!

ஸர்ஜன்கள் ஆப்பரேஷன் தியேட்டரில் தங்கள் சகாக்களால் ஆபத்துக்கு உள்ளாகிறார்கள். கரத்தின் ஓர் அலட்சியமான வீச்சு போதும். நோயாளியின் சீழ்பிடித்த கட்டியை அறுத்த கத்தி டாக்டரின் உடலில் பட்டுவிடும். அதன் கூர்மை பற்றிக் கூறவும் வேண்டுமா? அப்போது ஏற்படும் காயம் உடனே புரையோடி உயிராபத்தாக முடியலாம்.

ஆம்புலன்ஸில் அவசர உதவி அளிக்கப் போகும் டாக்டர்பாடு எப்போதும் ஆபத்துத்தான். மரணத்துடன் போராடிக் கொண்டிருக்கும் நோயாளியைக் காக்க ஆம்புலன்ஸ் அதிவேகமாகப் 'பறக்கும்'போது விபத்து எங்கே எப்போது ஏற்படும் என்று யாரால் சொல்ல முடியும்?

பெண் டாக்டர்களுக்கு வேறு ஒருவிதமான ஆபத்தும் உண்டு. அவர்களது தொழில் அவர்களுக்குப் பிறக்கப் போகும் குழந்தையைக்கூடப் பாதிக்கலாம். உதாரணமாக கதிரியக்கச் சிகிச்சை நடக்கும் அறைகளில் பணியாற்றும் டாக்டர்களின் குழந்தைகள் அங்கஹீனர்களாகப் பிறக்கலாம். கர்ப்பமாக இருக்கும்போது வேலையைத் தொடரும் டாக்டர்கள் நோயாளியிடமிருந்து விளையாட்டு அம்மையைப் பெற்றாலும் போதும், கருப்பையில் இருக்கும் சிசு பாதிக்கப்படும். இதை

விடப் பெரிய நோய் பிடிக்கவும் வாய்ப்புண்டு. அது பிறக்கப்போகும் குழந்தையைப் பாதிக்கவே செய்யும்.

கல்லீரலைத் தாக்கும் மஞ்சள் காமாலை போன்ற சில நோய்க் கிருமிகள் ரத்தத்தில் கலந்திருக்கும். டாக்டர்கள் பரிசோதனைக்காக நோயாளியிடமிருந்து ரத்தம் எடுக்கும் போதோ அல்லது ஊசி போடும்போதோ தவறுதலாக ஊசி டாக்டர் கையில் குத்தி விட்டால் போச்சு. டாக்டரை அந்த நோய் பிடித்து மரணபத்தாக முடியலாம்.

இதெல்லாவற்றையும் விட இப்போது டாக்டர்களை மிகவும் அச்சுறுத்தும் விஷயம் சில நோயாளிகளின் முரட்டுத்தனம்.

இந்நோயாளிகள் குறிப்பிட்ட மருந்துக்கு அடிமையாகி விடுகிறார்கள். அந்த மருந்தை டாக்டர் எழுதித் தரவில்லை யென்றால் கோபம் கொள்கின்றனர். அடித்துப் போடுவதும் உண்டு. போராடும் சக்தியற்ற சில வயதான டாக்டர்கள் மிரட்டலுக்கு அஞ்சியே போதை மருந்துகளை எழுதிக் கொடுத்து விடுவார்கள்.

இவை தவிர சின்னச் சங்கடங்களும் உண்டு. ஃப்ளு ஸீஸன் வரும், அல்லது டிங்கு ஜுரம் பரவும். அப்போது வரிசையாக இருபது முப்பது பேர் டாக்டரிடம் வைத்தியத்துக்கு வந்து அவர் முன் தும்முவார்கள், இருமுவார்கள். அவ்வளவுதான். மறுநாள் காலை டாக்டருக்கு 103 டிகிரி ஜுரம்!

அடுத்த தடவை டாக்டரிடம் போக நேரும் போது அவருக்காகச் சற்று அனுதாபப் படுங்கள்!

டாக்டர் வெர்னன் கோல்மன் - தமிழாக்கம் : இ. ரா.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆



# சுக்கு கண்ட இடத்தில்....!

'பாடப் புத்தகமாகிய' என்னை முன்னெல்லாம் 'டெக்ஸ்ட் புக் கமிட்டி' அங்கீகரிக்கும். அப்போது புத்தகப் பிரசுரகர்த்தர்கள் பாட புத்தகக் கமிட்டி அங்கத்தினரைத் துரத்திக் கொண்டு போவது வழக்கம்!

இப்போது அந்தத் தொல்லை கிடையாது.

ஏனென்றால், பாட புத்தகப் பிரசுரத் தொழில் தேசிய உடைமையாகி விட்டது. அரசாங்கத்தின் சார்பாக 'டெக்ஸ்ட் புக் ஸொஸைட்டி' என்பது தானே புத்தகங்களை எழுதியும் தயாரித்தும் வருகின்றது.

இப்போது இந்தக் கமிட்டியைத் துரத்துபவர்கள் புத்தக விற்பனை ஏஜெண்டுகள்.

இந்த ஆண்டு அந்த டெக்ஸ்ட் புக் கமிட்டி ஒரு மகத்தான சாதனை புரிந்திருக்கிறது. சாதாரணமாகப் பள்ளிக்கூடங்கள் திறந்து வகுப்புக்கள் ஆரம்பித்த சில வாரங்கள் அல்லது மாதங்களுக்குப் பின்னரே தான் பாட புத்தகங்கள் விற்பனையாகும். ஆனால் இந்த ஆண்டு அது சென்ற மாதத்திலேயே புத்தகங்களை அச்சிட்டுவிட்டது. விற்பனை ஏஜெண்டுகளுக்கும் அனுப்பி விட்டது.

காரணம் என்ன?

அரசாங்கம், பள்ளிக்கூடங்களில் புதுப் பாடத் திட்டம் புகுத்தத் தீர்மானித்திருக்கிறது. பாட போதனைகள் புதுமுறையில் செய்யப்பட வேண்டும்.

பழைய காலப் போதனை முறைக்கு 'கான்ஸென்ட்ரிக்' அதாவது ஆதார வட்ட மைய முறை என்று பெயர். அதன்படி ஒரு விஷயத்தைப் பற்றிப் பல ஆண்டுகள் தொடர்ந்து போதனை செய்யப்படும். புதுமுறைக்கு 'வர்ட்டிக்கல்' அதாவது 'செங்குத்து முறை' என்று பெயர். இதன்படி ஒரு குறிப்பிட்ட விஷயத்தைப் பற்றி முழு விவரங்களையும் ஒரு குறிப்பிட்ட வகுப்பிலேயே சொல்லித் தீர்த்து விடுவார்கள்.

உதாரணமாக, பூமியின் ஆகர்ஷண சக்தி பாடத்தை எடுத்துக் கொள்ளலாம். ஒரு வகுப்பில் நியூட்டன் மரத்திலுள்ள ஆப்பிள் பழம் கீழே விழுந்ததைப் பார்த்த போது அது ஏன் மேலே போகவில்லை, ஏன் கீழே விழுந்தது என்று சிந்தித்ததைப் பற்றிய கதை மட்டும் இருக்கும். இன்னொரு வகுப்பில் அந்தச் சக்தியை அளப்பதைப் பற்றிச் சொல்லிக் கொடுப்பார்கள். இப்படி ஒவ்வொரு வகுப்பிலும் சிறிது சிறிதாகப் போதனை செய்வார்கள். புது முறைப்படி ஆகர்ஷண சக்தியை பற்றிய 'அம்மட்டை'யும் ஒரே வகுப்பில் மாணவர்களின்மூளைக்குள்புகுத்துவார்களாம்.

''பல உபாத்தியாயர்களுக்குப் புது முறையில் போதிக்கத் தக்க அளவுக்கு யோக்கியதை கிடையாது. அவர்களுக்கு நல்ல பயிற்சி அளித்த பிறகே புதுப் பாடத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வர வேண்டும்'' என்று உபாத்தியாயர்கள் சங்கம் கூறுகிறது.

ஆனால் அரசாங்கமும், டெக்ஸ்ட் புக் ஸொஸைட்டியும் புதுத் திட்டம் இந்த ஆண்டு அமுலுக்கு வந்துதான் ஆக வேண்டும் என்று கூறுகின்றன. அவர்கள் அதற்காகக் கூறும் காரணம் என்ன தெரியுமா?

ஒரு நிறை கர்ப்பிணி தன் கணவனுடன் ஒரு தெரு வழியே சென்று கொண்டிருந்தாள். கணவன் திடீரென்று தன் மனைவியைப் பார்த்து, ''ஏய்! நில்லு. இங்கேயே பிள்ளை பெறு! சீக்கிரம்!'' என்றானாம். ''ஏன் என்ன அவசரம்?'' என்று மனைவி கேட்டாள்.

''இதோ பார், சுக்கு காயப் போட்டிருக்கிறது. மருந்துக்கு உதவும்!'' என்றானாம். இதிலிருந்து தான் 'சுக்கு கண்ட இடத்தில் பிள்ளை பெறுதல்' என்ற தமிழ்ப் பழமொழி ஏற்பட்டது.

தமிழ் மாநில டெக்ஸ்ட் புக் ஸொஸைட்டியினருக்கு இந்தப் பழமொழி தெரியும்போலிருக்கிறது. ஆகையால் அவர்கள் ''உபாத்தியாயர்களே! நாங்கள் கோடி ரூபாய் செலவழித்துப் புதுத் திட்டப் பாடப் புத்தகங்களை அச்சடித்து, விற்பனை ஏஜெண்டுகளுக்கு அனுப்பி விட்டோம். ஆகையால் நீங்கள் புதுப் பாடத் திட்டப்படி போதனை செய்துதானாக வேண்டும்'' என்று பிடிவாதமாகக் கூறி வருகிறார்கள்!

— அநாமதேயம்






சிலீப்புத் திர 'ஷவரி'ல் அரை மணி நேரம் குளித்த பின் பவுடர் பூசிக்கொண்டிருந்தாள் நர்ஸ் பிலோமினா. அவள் வாய் ஒரு பாட்டை முணுமுணுத்துக் கொண்டிருந்தது. கைக்குட்டையில் அவள் 'யூடிகொலோனை'த் தாராளமாகத் தடவிக்கொண்டிருந்தபோது, வாசற் கதவை யாரோ பலமாகத் தட்டினார்கள். 'ரமேஷா? ரமேஷாக இருக்க முடியாது! அவன் ஓட்டி வரும் விமானம் நாலரை மணிக்குத்தானே 'லாண்ட்' செய்யும்? குளித்து டிரஸ் மாற்றிக்கொள்வதற்குக் குறைந்தது முக்கால் மணி நேரம் தேவைப்படாதா?'

தட்...தட்...தட்...தட்!

கதவைத் திறந்தவள் திடுக்கிட்டாள். வந்திருந்தவரின் தோற்றத்தையும் அழுக்குக் கோட்டையும் பார்த்தவள் யாரோ கை ரேகை நிபுணன் என்று எண்ணினாள். திட்டலாம் என்று வாயெடுத்தாள்.

''நான் துப்பறியும் மாதவ ராவ். தங்களிடம் அவசரமாகப் பேச வேண்டியிருக்கிறது.''

''உள்ளே வாருங்கள்'' என்று கூறி 'லிப்ஸ்டிக்' தடவின இதழ்களை அவள் விரித்தபோது, நாற்பத்தாறு வயது மாதவ ராவுக்குக் கூட மனத்தில் கொஞ்சம் சபலம் தட்டிற்று. போதாததற்கு அவள் உள்பாவாடை, பிளவுஸ் மட்டும்தான் அணிந்து கொண்டிருந்தாள்.

அவள் ஸாரி உடுத்துக் கொண்டு வருவது வரையில் அறையின் அழகை ரசித்தார் ராவ். திரைச் சீலைகள் எல்லாம் மிக அழகாக இருந்தன. போதாததற்கு 'பீச்' காற்று வேறு குளுகுளுவென்று அடித்துக் கொண்டிருந்தது. 'வீடு கட்டினால் இந்த பெசண்ட் நகரில் கட்ட வேண்டும்' என்று ராவ் எண்ணிக் கொண்டிருக்கையில், அவள் ஒரு மோடாவை எடுத்து ராவ் அருகில் போட்டாள். பிறகு நெருங்கி உட்கார்ந்து கொண்டாள்.

''கேள்விகள் கேட்கலாம் ஸார். அரை மணி நேரத்தில் விட்டுவிடுவீர்கள் இல்லையா?''

''ஏன், ஆறு மணிக்கு ரமேஷுடன் படம் பார்க்கப் போகணுமா? இன்னும் நிறைய 'டயம்' இருக்கிறது. விமானம் இன்று நாற்பது நிமிஷம் லேட்.''

''உங்களுக்கு எப்படித் தெரியும் நான் ரமேஷுடன் படம் பார்க்கப் போகிறேன் என்று?''

''துப்பறியும் நிபுணனுச்சே! பிறர் வாழ்க்கையைத் துருவித் துருவிப் பார்ப்பதுதானே எங்கள் பிழைப்பு?''

''சரி, உங்கள் கேள்விகளைத் தொடங்கலாம்.''

''நீங்கள் எத்தனை ஆண்டுகளாக இந்த ஆஸ்பத்திரியில் பணியாற்றுகிறீர்கள்?''

''மூன்று ஆண்டுகளாக.''

''உங்களுக்குக் கல்யாணம் ஆகிவிட்டதா?''

''இதற்குப் பதில் உங்களுக்கே தெரியும்.''

''யாரையாவது காதலிக்கிறீர்களா?''

''ஏது, கண்ட கண்ட கேள்வியெல்லாம் கேட்கிறீர்களே!''

''என்ன செய்வது? துப்பறியும் தொழில் என்றால் இப்படித்தான்.''

''எனக்குக் காதலும் கிடையாது, கத்தரிக்காயும் கிடையாது.''

''பைலட் ஆபீஸர் ரமேஷுடன் நீங்கள் நெருங்கிப் பழகுகிறீர்கள் இல்லையா?''

''அது என் சொந்த விஷயம். நீங்க என்ன என் 'கார்டியனா' அதைப் பற்றிக் கேட்க?''

''ரமேஷின் மாமா பூபதி உங்கள் ஆஸ்பத்திரியில் நோய்வாய்ப்பட்டுக் கிடக்கையில் தானே உயிர் துறந்தார்? அவர் பெரிய கோடீசுவரர் இல்லையா? ரமேஷ்தானே அவர் வாரிசு? நீங்க மட்டும் ரமேஷை மயக்கி மணந்து கொண்டால்...''

''எனக்கு உண்மையிலே தலைசுற்றுகிறது.''

''ஏன் சுற்றாது? பூபதி நோயினால் இறக்கவில்லை என்று நான் கூறுகிறேன். அவர் கொலை செய்யப்பட்டார். ரமேஷுக்கு நீங்க உடந்தையாக இருந்தீர்கள்.''

''இது அபாண்டம்.''

''இல்லை. இதுதான் அப்பட்டமான உண்மை.''

''பூபதி மாரடைப்பினால் இறந்தார். 'வார்டு' டாக்டர்களைக் கேட்டுப் பாருங்கள்.''

''இல்லை அம்மா. நீங்க அவரை விஷமிட்டுக் கொன்றீர்கள்.''

''நல்ல வேடிக்கை! கடைசிநாள் அவருக்கு என் கையால் நான் மருந்து தரவே இல்லை. நர்ஸ் அஞ்சனாதான் தந்தார்.''

''டெம்பரேச்சர் எடுத்தது நீங்கதானே?''

''ஆமாம்.''

''விஷம் தடவின 'தெர்மாமீட்டரை' அவர் வாயிலிருந்து எடுத்தவுடன் வெளியே விட்டெறிந்தீர்கள். இதோ ஒரு துண்டு.''

''ஐயையோ! மோசம் போனேனே!''

''காலம் கடத்தாமல் குற்றத்தை ஒப்புக் கொண்டு விடுங்கள்.''

''அந்தப் பாவிப்பயல் ரமேஷ்தான் ஸார் அப்படிச் செய்யச் சொன்னான். அவன் அ[illegible]இல் மயங்கி நானும் செய்து விட்டேன். ஆமாம், இந்தத் துண்டு உங்களுக்கு எப்படிக் கிடைத்தது?''

''இது தெர்மாமீட்டர் துண்டு இல்லையம்மா; வெறும் கிளிஞ்சல்!'' — ஜி. எஸ். பி.

**மாதவ ராவ் மடக்குகிறார் - 1**

# ATTENTION: Textile, Hosiery, Jute and Paper Mills!



adsindia

This New Ennor

**HYDRAULIC BALING PRESS**

**can solve your storage space and transportation problems of Cotton, Banian and other textile wastes; Paper wastes and wood wool; Jute and Coir fibre.**

Now there is no need to pile them up in heaps wasting a voluminous space of your precious factory premises. Our ENNOR Baling Press can pack them up into neat bundles. You can save on storage space and on transportation cost too!

This easy-to-operate Hydraulic Baling Press with its built-in quality costs much less than you think! It is capable of making 50 60 bundles in 8 hrs. We can also supply to suit your specifications.

For further details please contact :

**BHARAT MOTORS**

5, Greames Road, Madras-600006

Phone : 86203 4    Grams : Bharatcars



# கல் எறிவோர் சங்கம்

தேர்தல் கூட்டங்களில் கல்லை விட்டெறிவது இப்பொழுது ஒரு தொழிலாகவே மாறிக் கொண்டிருக்கிறது. முதலில் கல்லை விட்டெறிந்தவர்கள் குறி பார்த்து எறியாததால், யாருக்கும் அடிபடவில்லை. அதனால் எறிந்தால் எறிந்து விட்டுப் போகட்டும் என்று பேசாமல் இருந்தோம். ஆனால் இப்போதோ, தொடர்ந்த பயிற்சியின் காரணமாக, கல்லை விட்டெறிபவர்கள் குறி பார்த்து எறியக் கற்றுக் கொண்டு விட்டதால், திரு ஜகஜீவன் ராம் அவர்களுக்குத் தலையில் அடிபட்டுவிட்டது. ஆகவே இனியும் நாம் வாளாவிருக்கக் கூடாது. கல்லை விட்டெறிபவர்களிடமிருந்து நம் பிரசங்கிகளைப் பாதுகாக்க ஏதாவது வழி செய்தாக வேண்டும்.

சிறந்த வழி, இப்படிக் கல்லை விட்டெறிபவர்களையெல்லாம் ஓர் அகில இந்திய கல் விட்டெறிபவர்கள் மகாநாடு என்று ஒரு மகாநாடு கூட்டச் சொல்லி, அவர்களை, ''தயவுசெய்து தேர்தல் கூட்டங்களில் கல்லை விட்டெறியாதீர்கள். அதற்குப் பதில் அழுகல் முட்டைகளையோ, அல்லது அழுகல் தக்காளிப் பழங்களையோ விட்டெறியுங்கள்'' என்று கேட்டுக் கொள்வதாகும்.

மேல்நாடுகளில், மக்கள் தங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவிக்க அழுகல் முட்டைகளையும், அழுகல் தக்காளிப் பழங்களையும் தான் தூக்கி எறிகிறார்கள். இந்த இரண்டு பொருள்களும் அழுகலாக இருப்பது பிரசங்கிகளுக்கு அருவருப்பை ஏற்படுத்துவதற்காக அன்று. இந்த முக்கியமான உணவுப்பொருள்களைப் பிரசங்கிகள் மீது எறிந்து வீணடிக்கக் கூடாது. அவை அழுகிப் போன பிறகு சாக்கடையில் தூக்கி எறிவதற்குப் பதில், பிரசங்கிகளின் மீது எறிந்தால் என்ன என்று மேல்நாட்டார் நினைக்கிறார்கள்.

நல்லவேளையாக இந்த இரு பொருள்களும் நம் நாட்டிலேயே கிடைக்கின்றன. ஆகவே மேல்நாட்டாரை எல்லா விஷயங்களிலும் பின்பற்றும் நாம், இந்த விஷயத்திலும் அவர்களைப் பின்பற்றினால் என்ன! ஆனால் இந்த யோசனை பழக்கத்துக்கு வர நாளாகும். அதுவரையில் என்ன செய்வது ?

கல்லெறிவதிலிருந்து பிரசங்கிகள் தங்களைக் காப்பாற்றிக் கொள்ள எனக்கு ஒரு நல்ல வழி தோன்றுகிறது. தேர்தல் போர்க்களத்தில் இறங்கும் இந்த வீரர்கள் பழைய காலப் போர் வீரர்களைப் போல் உடல் முழுவதையும், முகத்தையும் மறைக்கும் இரும்புக் கவசம் அணிய வேண்டும். அப்பொழுது யார் என்ன கல்லை விட்டெறிந்தாலும் அடிபடாது. உடனேயே இந்தக் கவசங்களைத் தயாரிக்க ஒரு தொழிற்சாலை ஏற்படுத்தினால் ஆயிரக்கணக்கானவர்களுக்குப் பிழைப்பும் கிடைக்கும்.

ஆனால் நம் அரசியல்வாதிகள் கவசங்கள் அணிய ஒப்புக் கொள்வார்களா என்பது சந்தேகம். ஆகவே, அவர்களைக் கல்லடியிலிருந்து காப்பாற்ற வேறு ஒரு வழிதான் கண்டு பிடிக்க வேண்டும்.

நாம் ஒன்று செய்யலாம். அகில இந்திய கல்லெறிபவர்களின் மகாநாட்டுக்காரர்களைத் தங்களுக்குள் ஒரு போட்டி வைத்து, அந்தந்த மாவட்டத்தில் யார் வெகுதூரத்துக்குக் கல்லெறிகிறார்கள், அந்தத் தூரம் என்ன என்று கண்டுபிடிக்கச் சொல்லலாம். அந்தந்த மாவட்டத்தில் தேர்தல் கூட்டங்கள் நடக்கும் போது, பிரசங்கிகளுக்கும், கூட்டத்துக்கும்

நாடோடி



உள்ள இடைவெளி இதைவிடச் சற்று அதிகமாக இருக்கும்படி பார்த்துக் கொண்டால் பிரசங்கிகளுக்கு ஓர் ஆபத்தும் ஏற்படாது.

இதை யெல்லாம் பார்க்கும்போது, இந்த ரோதனைக்குத் தேர்தல் கூட்டங்களே வேண்டாம் என்று சிலருக்குத் தோன்றலாம். இது ஒரு விதத்தில் சரிதான். படித்தவர்கள் பத்திரிகைகளைப் பார்த்து எந்தக் கட்சி என்ன சொல்லுகிறது என்று தெரிந்துகொள்ள முடியும். படிக்காத பாமரர்களோ பிரசங்கிகள் எவ்வளவுதான் தொண்டை பிளக்கப் பிரசங்கம் செய்தாலும் மனம் மாறப் போவதில்லை. பைசா யாரிடமிருந்து அதிகம் பெயர்கிறது என்றுதான் பார்க்கப் போகிறார்கள். எனவே தேர்தல் பிரசாரக் கூட்டங்கள் அவசியம் இல்லைதான்.

ஆனால் அரசியல் தலைவர்கள் இதற்கு ஒப்புக்கொள்ள மாட்டார்கள். தேர்தல் கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்து செலவுக்குப் பொய்க் கணக்குக் காட்டி, தங்கள் பிழைப்பை நடத்துகிறவர்கள் விடமாட்டார்கள். எனவே கல்லெறிதலுக்கு முற்றுப் புள்ளி வைக்கச் சிறந்த உபாயம் கல்லெறிவோர் தொழிற்சங்கம் ஏற்படுத்திவிடுவதுதான். உடனே அவர்கள் கல்லெறிதலுக்குத் தரப்படும் ஊதியம் போதாது என்று போராட்டம் தொடங்கி வேலைநிறுத்தமும் செய்து விடுவார்கள்! பிரச்னை தீர்ந்துவிடும்!

# வட்டமேஜை

"வாடிய பயிருக்கு வான்முகில்" கட்டுரை ரொம்ப டாப்! ஒரு மாபெரும் தலைவரின் அடக்கமான குணமும் பெருந்தன்மையும் அவரைப் போற்ற வைக்கும். பெருந்தலைவர் கூட்டங்களுக்கு நேரில் அழைத்துச் சென்றது கட்டுரை. மிக்க மகிழ்ச்சி.

திருநெல்வேலி
26–5–75 எஸ். சங்கரசுப்ரமணியன்

"விடுமுறையில் ஒரு குடும்பம்" கட்டுரை படித்து மகிழ்ந்தேன். 'கல்கி' பாணியை ஆன்றியாகப் பெற்றுள்ள தங்களுக்குப் பாராட்டு.

ஒரு சின்ன விஷயம். COCKBURN என்பதை கோபர்ன் என்று உச்சரிப்பதுதான் சரி. சரியான உச்சரிப்பை அறிந்து கொள்ள விரும்புவீர்கள் என்ற எண்ணத்தில் எழுதினேன்.

அண்ணாமலைநகர்
6–6–75 ஆர். சுந்தரராஜு

கோடைச் சிறப்பிதழில், திரு சுந்தா அவர்களின் 'பொன்னியின் புதல்வர்' கட்டுரையில், ருக்மிணி தேவியின் வரை படம் வெளியிட்டுள்ளீர்கள். அது 'மாலி' வரைந்த படம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. மாலி வரைந்த படம் இப்படி இருக்காது. இதை வரைந்தவர் 'சேகர்' என்பது படத்திலிருந்து தெரிய வருகிறது.

சென்னை
5-6-75 வர்ணம்

(பிழையைச் சுட்டிக் காட்டிய திரு வர்ணம் அவர்களுக்கு நன்றி தெரிவிக்கையில் அதே பக்கத்தில் "பாலசரஸ்வதியின் அந்தக் கச்சேரி 1923ல் நடந்தது" என்று இருப்பதை 1933 என்று திருத்திக் கொள்ளக் கோருகிறோம். — ஆசிரியர்)

சர்வதேச மாதர் ஆண்டு இது. நீங்களும் உங்கள் பத்திரிகையில் பெண் குலத்துக்குப் புது பெருமைகள் என சாதனைகள் புரிந்த மூன்று பெண்மணிகளைக் குறிப்பிட்டிருக்கிறீர்கள். ஒப்புக்கொள்ள வேண்டியதுதான். ஆனால் எல்லோருமே எங்களை — அதாவது என் போன்ற சராசரி குடும்பத் தலைவியை மறந்து விடுகிறீர்கள். தற்காலப் பொருளாதாரக் கொள்கையினால் விலைவாசிகள் நூறு சதம் ஏறித் திணறுவது நாங்கள்தான். இலையில் சாப்பிட உட்காரும்போது "இதுதானா இன்று உனக்குக் கிடைத்தது?" என்று கணவனும், "அம்மாவுக்கு இதற்கு மேல் ஒன்றும் பண்ணத் தெரியாது" என்று மழலைச் செல்வங்களும் குறைகூறும்பொழுது அலுத்துக்கொள்ளாமல் அவர்களுக்குச் சமாதானம் சொல்லி உணவு படைக்கிறோம். ஆனால் கணவனிடம் செலவினங்களுக்குப் பணம் பெறும்போது வாங்கும் வசவுகள் இருக்கின்றனவே, அப்பப்பா! 'ஏன்டா பெண்ணாய்ப் பிறந்தோம்' என்று அங்கலாய்க்க வேண்டியிருக்கிறது. அதனால் ஆசிரியரே, உங்களுடைய முதல் பாராட்டை என்னைப் போன்ற சராசரி குடும்பத் தலைவிக்குத் தெரிவியுங்கள்!

கோயம்புத்தூர்
29–5–75 கௌரி ராமமூர்த்தி

"சூடுநெருப்பு" என்ற ஒரு கதையில் ஒரு கதாபாத்திரத்துக்கு அரை வேக்காடு ஹோமியோபதி டாக்டர் கண்ணுக்கு மருந்து இட்டதால் கண்பார்வை போய் விட்டதாக, எழுதப்பட்டுள்ளது. இது ஹோமியோபதி டாக்டர்களை இழிவுபடுத்துவதாக இருக்கிறது.

மாற்று வைத்தியத்தில் அறுவை சிகிச்சையினால்தான் பார்வை பெறச்செய்ய முடியும் என்ற நிலையிலுள்ளவர்கள் பலர் ஹோமியோபதியில் "சினிரேரியா மாரிடிமா சக்கஸ்" போன்ற சில மருந்துகளினால் அறுவை சிகிச்சையின்றிப் பார்வை பெற்றுள்ளனர். ஆக ஹோமியோபதியில் கண்ணைக் கெடுக்கும் மருந்துகள் இல்லை. மாறாகக் கண்ணைக் கொடுக்கும் மருந்துகள் உள்ளன.

மதுரை-16
7-6-75 ஆர். கணேசன்

"மணி செய்த மாயம்" என்ற கவிதை மிக அருமையாக இருந்தது. எளிய சொல்லாட்சியும், நிறைந்த கற்பனை வளமும், நுண்ணிய நகைச்சுவையும் கொண்டிருந்ததோடு, உள்ளத்தை நெகிழ்விக்கும் பக்தியுணர்ச்சியையும் வெளியிட்டது அக்கவிதை. எழுதிய அன்பர் திருப்பூர் க. கிருஷ்ணனுக்கு என் பாராட்டுக்கள்.

விஜயவாடா
2–6–75 கோ. சங்கரநாராயணன்

“ஆஹாஹா...
கவர்ந்திழுக்கும் புதிய
நறுமணம் கொண்டது லக்ஸ்!”

என்கிறார் **ஜெயலலிதா**




மனமகிழ்ச்சியூட்டும் புதிய நறுமணம் அடங்கிய மென்மையான லக்ஸை நீங்களும் விரும்புவீர்கள். அது சுத்தமானது, மிருதுவானது, உங்கள் மேனியை வழவழப்பாகவும்' வனப்புடனும் வைக்கிறது —ஆம், ஜெயலலிதாவைப்போன்றே.

**லக்ஸ்—சினிமா நட்சத்திரங்களின் பரிசுத்தமான, மென்மை தரும் சோப்பு**

இந்துஸ்தான் லீவரின்
தரமான தயாரிப்பு

# ஓய்வு பெற்ற ஒருவரின் ஒப்பற்ற பணி



உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெற்ற பின் என்ன செய்வது என்பது பலருக்குப் பெரிய பிரச்னையாகி விடுகிறது. ஆனால் திரு சீனிவாச ராவ் அவர்களுக்கு அந்தக் கவலையே ஏற்படவில்லை. ஏனெனில் உத்தியோகத்திலிருந்து அவர் ரிடையரானாலும் அவரை ஓய்வு பெற யாரும் அனுமதிக்கவில்லை. ''மீரா பஜன் சொல்லித் தாருங்கள், வந்து கற்றுக் கொள்கிறோம்'' என்று சென்னையில் அவரைத் தெரிந்த பலர் அணுகினார்கள். தொடர்ந்து மயிலை பாரதீய வித்யா பவனத்தில் பஜன் வகுப்புக்களை நடத்துகிற அளவில் இவரது பணி வளர்ச்சியுற்று விட்டது.

மராட்டியைத் தாய்மொழியாகக்கொண்ட ஸ்ரீ ராவ் அவர்களின் பூர்வீகம் தஞ்சைஜில்லா திருவிடைமருதூர். பிறந்ததோ ஆந்திரப் பிரதேசத்தைச் சேர்ந்த சித்தூர். தெலுங்கைப் போதனா மொழியாகக் கொண்டு திருப்பதியில் எஸ். எஸ். எல். சி. வரை படித்தவர். ஸயன்ஸ் ஸப்ஜெக்ட் எடுத்துக்கொண்டு சென்னை மாநிலக் கல்லூரியில் பி. ஏ. தேறியவர். இப்படியாகத் தமிழ், தெலுங்கு, மராட்டி, ஹிந்தி, ஆங்கிலம் என்று பல மொழிகளைக் கற்றுத் தேர்ந்த இவருக்கு ஆர்வம் நடிப்புக் கலையில். அதன் பலனாக மகாராஷ்டிர மன்றத்தின் சார்பில் வி. பி. ஹாலில் நாடகங்களில் ஹீரோயினாகத் தோன்றி 'மதராஸ் பால கந்தர்வ' என்ற புகழை ஈட்டிக் கொண்டார்.

இந்த நாடகப் பற்று இவரைத் திரையுலகத்துக்கும் இட்டுச் சென்றது. தமிழ்ப் படமான ஸ்ரீநிவாச கல்யாணத்தில் ஸ்ரீனிவாச ராவ்தான் முதல் பட்டதாரி ஹீரோ. அந்தக் காலத்தில் அதாவது 1934-ம் ஆண்டில் இது ஒரு பெரும் புரட்சிதானே?

வயிற்றுப் பாட்டுக்காகப் பலவித வேஷம் என்பார்கள். ஆனால் ஸ்ரீ ஸ்ரீனிவாச ராவ் வயிற்றுப்பாட்டுக்காக அன்றி விளையாட்டாகவே பல வேஷங்கள் புனைந்து ஜமாய்த்திருக்கிறார். திரௌபதி வஸ்திராபஹரணத்தில் கிருஷ்ணனாக, பிரபாத்தின் சந்திரசேனாவில் ராமனாக, நாஷனல் மூவிசாரின் பார்வதி கல்யாணத்தில் மன்மதனாக என்றெல்லாம் நடித்திருக்கிறார். சைகலோடு ஸ்டண்ட் படங்களில் கூட நடித்த பெருமை இவருக்கு உண்டு.

சந்திரமோகன், துர்க்கா கோட்டே ஆகியவர்களுடன் மராட்டி, ஹிந்திப் படங்களில் நடித்திருப்பதோடு, நண்பன், நல்லிடேஜு போன்ற படங்களின் இயக்குநராகவும் இருந்திருக்கிறார். நாகையாவின் 'பக்த ராமதாஸ்' படத்தில் துணை டைரக்டராகவும் பணியாற்றியிருக்கிறார்.

இதற்கிடையில், ராணுவத்திலும், இந்திய அரசாங்கச் செய்திப் படத் துறையிலும் உத்தியோகம் பார்த்திருக்கிறார்.

இப்படிப் பல துறைகளில் பணியாற்றியுள்ள போதிலும் ஓய்வு பெற்றுள்ள இத்தருணத்தில் ஓயாமல் செய்கிற காரியம்தான் மன நிம்மதியும் முழுத் திருப்தியும் அளிப்பதாகக் கூறுகிறார் இந்த எளியவர். அதுதான் பலருக்கும் பக்திப்பாடல்கள் கற்றுத் தருவது. ஏறக்குறைய இருநூறுபேர் இவரிடம் மராட்டி 'அபங்கங்களும், ஜயதேவரது அஷ்ட பதிகளும் மீரா, துளசிதாஸர், சூரதாசர், கபீர்தாசர் போன்றவர்களது பஜன்களும் பயின்று வருகிறார்கள்.

உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெற்ற பின் பொழுதை வெறும் பொழுதாய்ப் போக்காமல் பகவன் நாமாவில் செலவிடத் தொடங்கிய ஸ்ரீ ராவுக்கு இன்று பொழுது போதவில்லை!

— ர. 'வீ.



**மர்மிஸ்ட்!**

''அடேயப்பா! நீ எழுதிற கதைகள் எத்தனை மர்மமாக இருக்கு; பத்துத் தடவை திருப்பித் திருப்பிப் படிச்சாக்கூட கதை என்னவென்றே புரியலையே!''

- வி. எஸ். கணேசன்

# பார்த்துப் போ...

"நாய்ப்பிளக்கப் பொய்பேசி
நவநிதியம் தேடி
நலமொன்று மில்லாத
நாரியரைக் கூடிப்
பூப்பிளக்க வருகின்ற
புற்றீசல் போலப்
பொலபொலெனக் கலகலெனப்
புதல்வர்களைப் பெறுவீர்
காப்பதற்கும் வழியறியீர்
கைவிடவும் மாட்டீர்
கவர்பிளந்த மரத்துளையில்
கால்நுழைத்துக் கொண்டே
ஆப்பதனை அசைத்திட்ட
குரங்குநிலை போல
அகப்பட்டீர் கிடந்துழல
அகப்பட்டீர் நீரே!"
—இது பட்டினத்தார் பாடல்.

## கடைசிப் பக்கம் கண்ணதாசன்



முதல் வரியை மட்டும் நீக்கிவிட்டால் இது எனக்கும் பொருந்தும். எல்லோருக்கும் பொருந்தும்.

சுமைகளை ஏற்றிக் கொண்டு இறக்க முடியாமல் தவிக்கும் மனிதனைப் பார்த்துப் பரிதாபப் படுகிறார் பட்டினத்தார்.

கால் விலங்குகள், கை விலங்குகள் — கழற்ற முடியாத சபலம்; வாழவும் முடியாத சாகவும் முடியாத குழப்பம்; கிரகஸ்தன் என்பவன் துயரங்களின் மொத்த வியாபாரி.

'வாழ்வது எப்படி' என்று பல பேர் போதித்து விட்டுப் போயிருக்கிறார்கள். எத்தனை பேருக்கு அது தெரிகிறது?

சபலத்திலும், சலனத்திலும் மனித மனம் உருண்டு விளையாடி உயிர் வாதையடைகிறது.

'இரண்டுக்கு மேல் பெற வேண்டாம்' என்று சர்க்கார் விளம்பரப் படுத்தினால், அது ஏதோ கடமையைச் செய்கிறது என்று கருதுகிறார்கள். அவர்களைப் பட்டினத்தார் கேலி செய்கிறார்.

'பூமி பிளந்து வருகின்ற ஈசல்களைப்போல் புதல்வர்களைப் பெறுகிறீர்களே!...' என்கிறார்.

'பொலபொலெனக் கலகலென' என்ற வார்த்தை ஜாலம் மிகவும் அற்புதமானது.

புளிய மரத்தை உலுக்கிப் புளியம் பழத்தை விழ வைப்பதுபோல் மொத்தமாகக் குழந்தைகளைப் பெறுகிறார்களாம்!

காப்பதற்கோ வழி தெரியவில்லை, கைவிடவும் முடியவில்லை!

அழுது லாபமென்ன?

அவசர சுகம்; ஆயுள் கால சங்கடம்.

ஆப்பசைத்த குரங்குபோன்ற மனிதர்கள்!

செய்துவிட்டு அழுவது ஜீவர்களின் வாடிக்கை!

தெரியாமலா பந்த பாசங்களை அறுத்து விடும்படி இந்து மதம் போதித்தது!

பாசம், இரக்கம், பயம் — சித்திரவதை.

எனது 'அர்த்தமுள்ள இந்து மதம்' புத்தகத்தைப் படித்தவர்களில் நூற்றுக்கணக்கானோர் எனக்குக் கடிதம் எழுதியிருக்கிறார்கள். எல்லாம் அவலம், ஓலம்.

கால் விரலால் நிலம் கீறிக் கைபிசைந்த நிலை.

துன்பங்களில் எத்தனை வகை உண்டு என்று அந்தக் கடிதங்கள் எனக்குக் கூறின.

அத்தனையும் ஆறுதல் சொல்லி அடக்க முடியாத துயரங்கள்.

நானென்ன பற்றற்ற ஞானியா, தத்துவ ஞானத்தால் பிறரைச் சாந்தப்படுத்த?...

பிறப்பிலிருந்தே ஒவ்வொரு விஷயத்திலும் எச்சரிக்கையாக இருக்க எல்லோராலும் முடிவதில்லை. துயரங்களுக்குக் காரணம் அதுவே:

குத்திய பிறகுதான் 'முள்' தெரிகிறது; தடுக்கிய பிறகுதான் 'கல்' தெரிகிறது; வழுக்கிய பிறகுதான் 'நிலம்' தெரிகிறது; உண்ட பிறகுதான் 'நஞ்சென்'று புரிகிறது; மகிழ்ச்சியாக ஆரம்பிப்பது 'மரண வாதை'யாக முடிகிறது; சொர்க்கத்துக்குள் நுழைவதுபோல் மனிதன் நரகத்துக்குள் காலடி எடுத்து வைக்கிறான். பிறகோ பளபளப்பாகத் தெரிவதெல்லாம் 'பாம்பு' என்று முடிவு கட்டுகிறான்.

தீமைகளை அனுபவித்து விட்டால் பிறகு நன்மை கூடத் தீமையாகத் தெரிகிறது.

நம்பிக் கெட்டவர் பலர்; நம்பாமல் கெட்டவர் சிலர்.

எது, எப்படி, ஏனென்ற கேள்விகளுக்கெல்லாம் இடமே இல்லை.

பட்டும், கெட்டும் புரிந்து கொள்வதே மனித இனம். ஓலமிட்டு என்ன பயன்?

புத்தி எவ்வளவு தூரம் செயல்படுகிறதோ, அவ்வளவு நேரம் வேலைசெய்வோம்.

எது வருகிறதோ அதை ஏற்றுக் கொள்ளுவோம்.

இந்து மதத்தின் தத்துவ ஞானிகளும், சித்தர்களும் மூல வித்து எது என்பதைத் தத்துவ பூர்வமாக உணர்ந்தவர்கள்.

காஞ்சிப் பெரியவர்கள் கவலைப்பட என்ன இருக்கிறது, உலக க்ஷேமத்தைத் தவிர?

பந்தம் உண்டா, பாசம் உண்டா, சொந்தம் உண்டா, சுகம் உண்டா, துன்பம் உண்டா?

எதையும் ஒரு தடவைக்குப் பல தடவை யோசியுங்கள்.

செய்து கெடுவதைவிட, செய்யாமல் கெடுவதில் துயரம் குறைவு.

ஏதாவதொரு விஷயத்தில் ஆத்திரம் வந்து உடனே ஒரு முடிவெடுக்கத் தோன்றினால், அதனை மறுநாளைக்கு ஒத்திப் போடுங்கள். அப்போது ஆத்திரம் குறைந்து, அறிவு வேலை செய்யத் தொடங்கியிருக்கும்.

மனம் எனும் ஒன்று மனிதனை இழுத்துச் செல்லும் வெள்ளம். அணை போட்டுப் பயன்படுத்தினால் அதுவே பயிருக்கு உதவும்.

இல்லை என்றால் சர்வ நாசத்துக்கும் அதுவே காரணமாகி விடும்.

வாழ்க்கையைத் தொடங்குவோருக்கு நான் சொல்வதெல்லாம் 'நில்; கவனி;— யோசனை செய்; மெதுவாக நட.'

அதிலும் துயரம் வந்தால் ஆண்டவன் மீது பாரத்தைப் போடு.

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

பாராட்டுவோர் பலருண்டு
உங்கள் முகத்திற்கு, பகைகள் பல
உண்டு உங்கள் மேனிக்கு.

**பக்கபலமாக வைத்துக்
கொள்வீர்—பாண்ட்ஸ்
வானிஷிங் க்ரீம்**

பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உங்கள் சருமத்தைக் காற்று, தூசி, சீதோஷ்ண நிலைகளின் கொடுமைகளிலிருந்து பாதுகாக்கிறது. ஈரத் தளதளப்பை எழில்பட மேனியிலே நிலை நிறுத்தும் ஒரு விசேட 'ஹ்யூமெக்டண்ட்' அதில் அடங்கியுள்ளது. அது பிசுக்கற்ற மழமழப்பான பொலிவைத்தருகிறது. அதைப் பரிபூரணப் பவுடர் படிமானப் பூச்சாகஉபயோகியுங்கள். பல மணி நேரங்களுக்கு உங்கள் 'மேக்-அப்'பை புதுமை குன்றாது அழகுற வைக்கிறது. அல்லது பூரணமான 'மேக்-அப்' சாதனமாக வேண்டுமானாலும் உபயோகியுங்கள்.

பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்—பரிபூரணப் பவுடர் படிமான க்ரீம்.




**சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடெட்**
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏ. யில் இணைக்கப்பெற்றது)

Registered No. M. 4382
Registered as a Newspaper in Ceylon

பாரதக் கலைத் திறத்தின்
பரம்பரைப் பெருமை
பிரதிபலிக்கும் வண்ணக் காவியமாம்,
கோல வடிவங்கள் கொலுவிருக்கும்
எழிலோவியமாம் டெரிகோஸா சேலைகள்



கட்டாவ்
டெரிகோஸா சேலைகள்